229

# விவேகபோதினி

"எப்பொருள் ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருவள்ளுவர்.

தொகுதி XIV} துன்மதிஞு மார்கழிமீ :: 1922-ம்ஞு ஜனவரிமீ { பகுதி 7

## முருகன் வழிபாடு

### WORSHIP OF LORD MURUGA

கொந்து வார்குர வடியினு மடியவர்
  சிந்தை வாரிச நடுவினு நெறிபல
  கொண்ட வேதனன் முடியினு மருவிய
                குருநாதா-
கொங்கி லேர்தரு பழநியி லறுமுக
  செந்தில் காவல தணிகையி லிணையிலி
  கொந்து காவென மொழிதர வருசம
                யவிரோத;
தந்த்ர வாதிகள் பெறவரி யதுபிறர்
  சந்தி யாதது தனதென வருமொரு
  சம்ப்ர தாயமு மிதுவென வுரைசெய்து
                விரைநீபச்-
சஞ்ச ரீகரி காமுரல் தமனிய
  கிண்கி ணீமுக விதபத யுகமலர்
  தந்த பேருள் கனவிலு நனவிலு
                மறவேனே;
சிந்து வாரமு மிதழியு மிளநவ
  சந்த்ர ரேகையு மரவமு மணிதரு
  செஞ்ச டாதரர் திருமக வெனவரு
                முருகோனே-
செண்ப காடவி யினுமித ணினுமுயர்
  சந்த னாடவி யினுமுறை குறமகள்
  செம்பொ னூபுர கமலமும் வளையணி
                புதுவேயும்;
இந்து வாண்முக வனசமு ம்ருகமத
  குங்கு மாசல யுகளமு மதுரித
  இந்த ளாம்ருத வசனமு முறுவலு
                மபிராம-
இந்த்ர கோபமு மரகத வடிவமு
  மிந்த்ர சாபமு மிருகுழை யொடுபொரு
  மிந்த்ர நீலமு மடலிடை யெழுதிய
                பெருமாளே!

திரைபாயும் கங்காநதியையும் கொன்றையையும் பிறைச் சந்திரனையும் நாகத்தையும் சூட்டியுள்ள சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானுடைய திருமகனாக வந்து அவதரித்தருளிய ஞான தேசிகனே! சண்பக வனத்திலும், தினைப்புனத்தி லமைக்கப்பட்டுள்ள பரண்மீதும், ஓங்கி வளர்ந்துள்ள சந்தன மரங்கள் அடர்ந்த வனத்திலும் வசிக்கும் குறவர் குலத்தில் அவதரித்தருளிய உலக மாதாவான வள்ளிநாயகியார[illegible]த்துக்கொண்ட மிகுந்த காதலினால் அத்தேவியாரது செம்பொன்னாலாகிய சிலம்புகளணிந்த செந்தாமரை மலர்களை யொத்த பாதங்களையும், வளைகளையணிந்த திருக்கரங்களையும், சந்திரனது தண்ணொளி வீசும் செந்தாமரை முகத்தையும், கஸ்தூரி முதலிய திவ்விய வாசனைகளை யணிந்துள்ள தனபாரங்களையும், மிகவும் இரம்மியமான இந்தளம் என்னும் பண்ணையொத்ததும் துக்கத்தை யகற்ற வல்லதுமான அமுத மொழிகளைச் சிந்தும் திருவாய் மலரையும், அதிற் பொருந்தி விளங்கும் புன்னகையையும், அழகிய சிவந்த உதடுகளையும், மரகதத்தைப்போல் பச்சையான திருவுருவத்தையும், வானத்தில் தோன்றும் வில்லைப்போல் வளைந்த புருவங்களையும், காதுகளிலணிந்துள்ள குழைகளினளவு ஓடும் இந்திர நீலத்தைப்போற் சிறந்த வொளி வீசும் கண்களையும் விசித்திரமாக எழுதிக்களித்த பெரியோனே! நறுமணம் வீசம் பூங்கொத்துக்கள் தழைந்திருக்கும் குராமரத்தின் கீழும், அடியவர்களுடைய இதயத் தாமரையின் நடுவிலும், நற்கதி பெறுவதற்குப் பல வழிகளை யெடுத்துப் போதிக்கும் வேதத்தின் முடி மீதும் மகிழ்ந்து அமர்ந்தருளும் குருநாதா! கொங்குதேசத்தை அழகுபெறச்செய்யும் பழநிமலையில் அமர்ந்தருளும் ஆறுமுகப்பெருமாளே! திருச்செந்தூரில் உறைந்தருளும் எனதிறைவனே! திருத்தணிகை மலையில் இணையற்றவனாய் விளங்கும் எனதண்ணலே! [கொடுந்தொழிலையே புரிந்துவந்த வேடர்களின் நடுவில் தோன்றி அவர்களைப்போலவே வனசர வாழ்க்கையை வாழ்ந்து நடித்த எனதன்னை வள்ளிநாயகியாரைத் தடுத்தாண்டதுபோல ஐம்புலன்களாகிய வேடர்கள் கைப்பட்டு வருந்தும்

(இதன் தொடர்ச்சி 226-ம் பக்கம் பார்க்க.)




# விவேக போதினி

தொ. 14] துன்மதி௵ :: மார்கழி௴ [ப. 7


## கந்த புராணம்

### SKANDA PURANAM

மேற்கூறியவாறு ததீசி மகா முனிவர் அடக்கவொணுச் சினத்தினல் தக்ஷனையும் தேவர்களையும் மறையவர்களையும் சபித்து விட்டு அந்த யாகசாலையை விட்டகன்றவுடன், அந்த யாகசாலையில் பல அபசகுனங்கள் காணப்பட்டன. தக்ஷனது கொடி தம்பத்தி லிருந்து அறுந்து கீழே விழுந்தது. காட்டி லுள்ள காகங்களும் கழுகுகளும் கூட்டமாய் விரைந்துவந்து யாகசாலையிலுள்ள யூபஸ்தம் பங்களின்மீது அமர்ந்தன. கண்டோர்யாவரும் மனங் கலங்குமாறு, வேதவல்லியின் கழுத்தி லிருந்த திருமங்கல்ய சூத்திரமும் தானுகக் கழன்று கீழேவிழுந்தது. மற்றும் பல துர்சகு னங்கள் தக்ஷனது இறுதி நெருங்கிவிட்ட தென்று உணர்த்தின. ஆனல் ஊழினல் தீய நெறியில் தள்ளப்பெற்ற தக்ஷன் அவைகளைச் சிறுதும் இலக்ஷியஞ் செய்யாது, தன் பிதா வான பிரமதேவரையும் திருமாலையும் முத லில் முறைப்படி பூசித்து,பிறகு தனது பெண் களுக்கும் மருகர்களுக்கும் மங்களகரமான பல சீர்களைக் கொடுத்தான். பிறகு தக்ஷன் கட்டளைப்படி யாகமுறையில் வல்ல பலமுனி வர்கள் ஓமகுண்டங்களில் அக்கினியை வரு வித்து, மந்திரங்களைக் கூறி, நெய்யை ஆகுதி செய்து, சிவபெருமானைத் தவிர மற்றத் தேவர்கள் யாவர்கும் அக்கினி மூலமாக அவிர்ப்பாக மளித்தனர்.

இவ்வாறு தனக்கு நாசமுண்டாகுமாறு தக்ஷன புரிந்த யாகத்தினை திரிலோக சஞ் சாரியான நாரதமாமுனிவர் கண்டு, ஆச்சரி யத்துடன் திருக்கைலாயத்துக்குச் சென்று, எம்பெருமானை அன்புடன் வணங்கித் துதி த்து நின்றார். பிரபஞ்சமெங்கும் வியாபித்து நிற்கும் முக்கணெந்தை யாது மறியாதவர் போல உலகத்தில் என்ன விசேஷமென்று நாரதமாமுனிவரைக் கேட்டருளினர். அதற்கு அம்முனிவர், "யாவரினும் சிறந்த தக்ஷன் தன் மதியை யிழந்து கங்கைக்கரையில் மாயோன் பிரமன் முதலிய தேவர்களுடன் ஒரு வேள்வி இயற்றுகின்றான். இதுதான் இப்போது உலகத்திலுள்ள புதுமை!" என் றுரைத்தார்.

எம்பெருமான் திருவருளினல் அவரது இடப்பாகத்தி லுறையும்படியான பெரும்பேற் றைப் பெற்ற தாக்ஷாயணி அவ்வார்த்தை களைச் செவியுற்றதும், எம்பெருமான் பக்கத் திலிருந்து எழுந்து, அவரது திருவடிகளைப் பணிந்து கைகூப்பி நின்று, "எனக்குத் தந்தை யென்று யாவராலும் கருதப்படும் தக்ஷன் செய்யும் யாகத்தைக் காணவேண்டுமென்ற விருப்பமுடையவளா யிருக்கிறேன். அதைப் பார்த்துவிட்டுச் சீக்கிரம் திரும்பிவந்துவிடுகி றேன். அடியேனுக்கு இப்பொழுதே விடை கொடுத் தருளவேண்டும்" என வேண்டி னள்.

அப்போது சிவபெருமான், "பெண்ணே! அத் தக்ஷன் நின்னை மதிக்கமாட்டான். அருந் தவத்தினல் நம்மிடமிருந்து பெற்ற சிறந்த வரத்தினல் அவன் செருக்குற்று தேவர்க ளுடன் கூடி மயக்கமுற் றிருக்கிறான். இப் போது நீ அவன் செய்யும் வேள்வியைப் பார்க் கப் போகவேண்டாம்" என்று கூறியருளி னர். அதுகேட்டு தாக்ஷாயணி, "எம்பெரு மானே! தீய நெறியிற் பட்ட தக்ஷன் தன் மதியை யிழந்துவிட்டா னதலால், அவன் பிழையைப் பொறுத்தருளவேண்டும்" என்று கூறி எம்பெருமான் திருவடிகளை வணங்கி னள். பிறகு அருட்கடலாகிய உமாதேவியார், "பிழைபொறுத் தாட்கொண்டு முத்தி வீடரு ளும் பெருங்குணமுடைய அண்ணலே! அவ் வேள்வியைப்பார்த்துவிட்டுச் சீக்கிரம் திரும்பி வருகிறேன். அடியேனுக்கு விடைகொடுத் தருள வேண்டும்" என்று வேண்டினள்.

அதுகேட்டு எம்பெருமான், "உமையே! தக்ஷன் செய்யும் யாகத்தின் சிறப்பைக் கண்

ணுற உனக்கு அவ்வளவு ஆவலிருக்குமாயின், அவ்வாறே சென்று விரைவில் திரும்பிவருவாயாக!" என்று கூறி விடைகொடுத்தருளினர்.

உமாதேவியார் இறைவனடி பணிந்தெழுந்து சிறந்ததோர் விமானத்திலேறி, சுமாலி மாலி யென்னும் பெண்கள் வெண்மதிபோன்ன குடையைத் தாங்கவும், மங்கலே, சுமனை முதலிய எண்ணிறந்த மாதர்கள் சாமரைகளை வீசவும், அழகிய மாதர்கள் பலர் ஆலவட்டம், மயில்தோகை விசிறி இவைகளை எங்கும் நறுமணம் வீசுமாறு வீசவும், பல மாதர்கள் கண்ணாடி, புஷ்பமாலை இவைகளை ஏந்தி நிற்கவும், நந்தி தேவரின் மனைவியான சுகேசை யென்பவள் தேவியின் பாதுகைகளைக்கொண்டு பின்தொடரவும், பல மாதர்கள் மங்களகீதங்களைப் பாடவும், மற்றும் பல மாதர்கள் அவைகளுக்கிசைய நிர்த்தனஞ் செய்துவரவும், சோமநந்தியைத் தலைவனாகக்கொண்ட பன்னிரண்டு கோடிப் பூதகணங்கள் வெண்கொற்றக் குடைகளையும் இடபக் கொடிகளையும் தாங்கியவராய் தன்னைப் புகழ்ந்து முன்னே செல்லவும், விரைந்து சென்று தக்ஷனது யாகசாலையையடைந்து, விமானத்தினின்று இறங்கித் தக்ஷன் எதிரே சென்றாள்.

அப்போது சீலமில்லாத தக்ஷன் உமாதேவியாரை வெகுண்டு நோக்கி, "தந்தை தாயில்லாத சிவன் சிந்தைக்குகந்த மனைவியான நீ இந்த யாகத்தினை நான் செய்யுங்காலத்தில் நான் பெற்ற மகளிரைப்போலவே இங்கு எதற்காக வந்தாய்? இச்சிறந்த யாகத்துக்கு விரைவில் வரவேண்டுமென்று கூறி உன்னை எவரும் அழைக்காதபோது நீ வரலாமோ? நீ உன் மலைக்குப் போகலாம்!" என்று அலக்ஷியமாய்ப் பேசினன்.

அதுகேட்டு உமாதேவியார், "என் தங்கைமாருக்கும் அவர்களை மணந்த மருகருக்கும் தகக தக்க சீர்களைக்கொடுத்த நீ என்னையும் என் நாயகனையும் சிறிதளவு நினைக்கவுமில்லை. நீ செய்யும் யாகத்தைப் பார்ப்பதற்காகத் தானாகவே வந்த என்மீது கோபங்கொள்ளுகிறாய். இது உனக்கு அழகோ? இது உன் பெருமைக்கு ஓர் குறைவை யுண்டாக்காதோ? இவ்வாறு நீ நடந்துகொள்ளுவதற்குக் காரணமென்னவென்று உரைப்பாயாக" என மொழிந்தாள்.

உடனே கொடியோனாகிய தக்ஷன் உமாதேவியாரை நோக்கி, "சத்துவகுணம், ரஜோகுணம், தமோகுணம் என்னும் முக்குணங்களில் தீயதான தமோகுணத்துக்குரிய சங்காரத் தொழிலைச் செய்து, பேய்களோடு ஆடல் செய்யும் பித்தனுக்குத் தேவியானவுடன் நீயும் அவன் நிலையை அடைந்தாய்! அவனுடன் கூடி நீ செருக்குற்றிருந்ததனால் உன்னை நான் இகழ்ந்தேன். உனது தங்கைமார்களை மணந்துகொண்ட மருகர் யாவரும் என்னிடத்து அன்புடையவர்கள். ஆதலால் நான் அவர்களிடத்துப் பிரியம் பாராட்டி சிறந்த வரிசைகளை அவர்களுக்கு அளித்தேன். சிறந்த அவிர்ப்பாகங்களையும் அவர்களுக்கு ஈந்தேன். உலகமுண்ட மாயவன், பிரமன் முதலிய யாவரும் வந்து என்னைத் துதிக்கின்றனர். சிவனும் நீயும் என்னைச் சிறிதும் மதிக்கவில்லை. ஆதலால் உங்களிடத்து எனக்குப் பிரியமில்லை. காளையை வாகனமாகக்கொண்ட நின் நாயகனுக்கு இந்த யாகத்தில் அவிர்ப்பாகமும் அளியேன்! சிவனைக்குறித்து வேதங்களிற் கூறியுள்ள மெய்வசனங்களையும் என் வல்லமையினால் மாற்றியும் விடுகிறேன். இங்கு தானாக வந்துள்ள உனக்கும் நான் தினையளவும் மரியாதை செய்யமாட்டேன்" என்று கடுமையாய்க் கூறினன்.

அந்தக் கடுமொழிகள் எமதன்னையின் செவியிற் பட்டவுடன், அவள் மனத்தில் மாசற்ற கோபமுற்பவித்து அவளது பெருமூச்சுடன் கலந்து வெளியேவந்து சண்டமாருதத்துடன் கலந்த ஊழித் தீயைப்போல அண்டங்களையும் அளவில்லா உயிர்களையும் அழிப்பதற்கெழுந்தது. பல உலகங்களும், சமுத்திரங்களும், குலபருவதங்களும், அக்கினிகளும், திக்கு யானைகளும் தேவரும் திடுக்கிட்டு நடுங்கினார்கள். அச்சமயத்தில் உமாதேவியின் அருகில் நின்ற விமலையென்னும் மாது, தேவியை வணங்கி, "உலகங்களையெல்லாம் ஈன்ற தாயாகிய உனக்கு இக்கோபம் ஏற்குமோ? எண்ணிறந்த மைந்தர்களை ஈன்றருளி அவர்கள் அனுபவித்துக் களிப்பதற்குரிய பலவித போகங்களையுமளித்த தாயாகிய நீயே யாவற்றையும் அழிக்கத் தலைப்பட்டால், அவர்கள் தப்பிப் பிழைப்பதற்கு வழியேது? இவன் தருமநெறி பிறழ்ந்து நடந்தானென்று நீ கோப

மூற்ருய் ! அது நியாயமேயெனினும், அக் கோபம் இமைப்பொழுதுக்குள் யாவற்றையும் அழித்துவிடுமாதலால்,இப்பிழையைநீபொறுத் தருளவேண்டும்!'' என்று கூறித் துதித்தாள்.

அவ்வார்த்தைகளைக் கேட்டு உமாதேவி தனது கோபத்தை அடக்கி உள்ளே செலுத்தி, தக்ஷனைநோக்கி,“நீஎன்னை இங்கு இகழ்ந்ததை ஒருபொருட்டாக நான் எண்ணவில்லை. ஆனல் என்நாயகனை நீ இகழ்ந்ததைக்கேட்டுச் சகிக்கமுடியவில்லை. அந் நிந்தை மொழிகள் என் செவிகளுக்குள் விஷத்தைப்போல் பாய்ந்துசென்றன. குணமென்பது இல்லாத வராயும்மாசென்பது என்றும் தம்மீதுபடியப் பெருதவராயுமுள்ள இறைவர் உலகங்களின் நன்மையைக் கருதி சிற்சில சமயங்களில் பரி சுத்தமான குணங்களை யுடையவராகத் தோன்றுகிருர். அவ்வாறு அவர்கொள்ளும் குணங்கள் எண்ணிறந்தன வாதலால், அவர் சங்காரஞ் செய்யும் தமோகுண முடையவர் என்று நீ கூறியவிதமாக அவ்வளவு எளிதாக அவர் குணங்களை எடுத்துரைப்பது சாத்திய மன்று. சங்காரகாலத்தில்மட்டும் அந்தத் தமோகுணத்தைக்கொள்ளுகிருரேயன்றி. அக் குணம் எந்நாளும் ஞானநாயகனுன எம்பெரு மானுடைய இயற்கையிற் கலந்ததன்று. அச் சங்காரத்தொழிலும் தீயதன்று. ஏனெனில், உயிர்கள் ஓயாமல் செத்தும் பிறந்தும் வருந்தி அலைவுறுவதைக்கண்டு மனமிரங்கி அவைக ளுற்ற இளைப்பை யாற்றுகிறதற்காகவே சர் வேசுவரன் அவைகளை மாய்க்கிருர். அச்சங் காரத்தொழிலைச் செய்யத்தக்கவர் தமக்கோர் இறுதி யறறவரே யாதலாலும், படைத்தல், காத்தல் என்னும் தொழில்களைப் போலன்றி அத்தொழில் தம் மனத்தில் அகங்காரம் இறை யளவு மிருக்கப்பெருதவர்களால்தாம் இயற்றக் கூடியதாகையாலும், அத்தொழிலை எமதிறை வனே புரிந்துவருகிருர். அவ்வாறு சங்கரிக்கும் எம்பெருமான் உலகங்களையும் உயிர்களையும் முன்போலவே திரும்பவும் சிருஷ்டிக்கிருர். குற்றமற்றஆகமங்களையும் வேதங்களையும்திரு வாய்மலர்ந்தருளி, பவநோய் தம்மை யணுகா மல் ஆன்மாக்கள் தம்மைக் காப்பாற்றிக்கொள் ளும் சக்தியைத் தரும் வித்தைகளுக்கு இறை வனுய், பவரோயை முற்றுமகற்றி முத்திவீட் டைத் தந்துதவும் எந்தையைத் தாமத குண முடையவனென வுரைத்தல் தகுதியோ? சிவ யென்னும் சிறந்த எழுத்துக்க ளிரண்டையும் செப்புவோர் எளிதில் நற்கதி யடைவார்கள். அப்படிப்பட்ட திருநாமம் வாய்ந்த எம்பெரு மானை நீ இகழ்ந்தனையே. நீ கடைத்தேறுவ தெங்ஙனம்? முன்னம் பிரமனும் முகுந்தனும் தேடியுங்காணவொணுதசிவபெருமானை முதல் வராகக் கருதாமல் இகழ்வாருக்குத் தண்டனை கிடைக்குமென வேதங்கள் கூறுகின்றன. வேதநாயகரான எம்பெருமானை விலக்கி நீ வேள்வி செய்தாயாதலால், அத்தண்டனை உனக்கும் விரைவிற் கிடைக்கட்டும்!'' என்று கூறிவிட்டுத் தன் பரிசனங்கள்சூழத் தன் விமா னத்திலேறி திருக்கைலாயத்துக்கு விரைந்து சென்றனள். சிறந்த அக்கிரியை யடைந்ததும் உமாதேவி விமானத்தைவிட் டிறங்கித் திருக் கோவிலுக்குட் சென்று, தன் நாயகனது திருவ டிக் கமலங்களில் வீழ்ந்துவணங்கி யெழுந்து, “எம்பெருமானே ! அற்பனுன தக்ஷன் தேவ ரீரை மிகவும் இகழ்ந்தானுதலால் அவன் அரு மையாகச் செய்யும் வேள்வியை யழித்துவிட வேண்டும்'' என வேண்டினள்.

குற்றமற்ற பேரருள் வாரிதியான எமது இறைவர்எத்தேவர்க்கு எவரால அளிக்கப்படும் அவியும் வந்து அமரப்பெறும் திருக்கரத்தினை யுடையவராதலின், பிரமன், விஷ்ணு முதலிய தேவர்களுக்குத் தக்ஷன் அளித்த அவிர்ப் பாகங்களை யெல்லாம் அத்தேவர்களுக்குள் நின்று தாமே அடைந்திருந்தாராதலின், உமா தேவி கூறிய மொழியைச் செவி சாற்ருதவ ராய்ச் சும்மாவிருந்தார். அதுகண்ட அம்பிகை இறைவரை நோக்கி,“எனது நாயகனே! தேவ ரீருக்கு விருப்பு வெறுப்பு இரண்டுமில்லையாய யெனினும், தங்களிடத்தில அன்புடைய எனக் காக அவன் செய்யும் தீயவேள்வியை யழித் தருளவேண்டும்'' என்று கூறி வணங்கினள்.

அப்போது எமதிறைவர் உலகெலா மீன்ற அன்னையாகிய உமாதேவியாரது அன்பினைக் கண்டு வியந்து உளங்கசிந்து எமதன்னையின் இச்சை நிறைவேறுமாறு சிறிது மனத்தினில் நினைத்த மாத்திரத்தில், பிறைச்சந்திரனைச் சூடிய செஞ்சடாமுடியை யுடைய ஆயிரந்தலை கள் விளங்கவும், ஆயிர முகங்களிலும மும் மூன்று கண்கள் தீப்பொறிகள் சிந்தவும், சண்டமாருதமும் அக்கினியும் அஞ்சி விலகு

மாறு நாசியினின்று ஊர்த்துவ சுவாசம் கிளம்பவும், பிறைச்சந்திரனைப்போன்றவக்கிரதந்தம் நிலவனைய ஒளிவீசி விளங்கவும், கொடிய அரவங்களே கடகங்களாகவும், தோளணிகளாகவும், மற்றும் பலஆபரணங்களாகவும் அணியப்பட்டு விளங்கவும், எலும்புமாலேயும், சிரமாலேயும், பன்றிக்கொம்பும், ஆமையினேடும் முப்புரிநூலுடன் மார்பினில் அசைந்து விளங்கவும், ஈட்டி, வேல், தடி, வச்சிராயுதம், வாட்படை, திரிசூலம், வில், அம்பு, சக்கரம் முதலிய அநேகவிதமான ஆயுதங்கள் இரண்டாயிரம் திருக்கரங்களில் தோன்றவும், பவநோயையுன்னி அஞ்சி வருந்தும் அன்பர்களைத் தைரியப் படுத்துமாறு அஞ்சல் அஞ்சல் என்று பொற்கழல்களிலுள்ள சிலம்புகள் ஒலிக்கவும், அந்திக்காலத்து வானத்தையொத்த சிவந்த திருமேனியுடனும் விடத்தினையுடைய கண்டத்துடனும் எந்தையின் வடிவத்தை யுடையவராய் வீரருக்குள் முதல்வராகிய வீரபத்திரர் எந்தையின் நெற்றிக் கண்ணினின்றும் தோன்றினர்.

அப்போது உமாதேவி தனது கோபத்தினல் ஆயிரந் தலைகளும் இரண்டாயிரங் கைகளுமுடைய பத்திரகாளியைச் சிருஷ்டிக்க, அவள் வீரபத்திரக்கடவுளையணுகி அவருக்குத் துணையாக நின்றாள். அவர்களிருவரும் சேர்ந்து நிற்பதைக்கண்டு மகாதேவரும் தேவியும் மகிழ்ந்தனர். அக்காலையில் வீரபத்திரர் தம்மை வந்தடைந்த பத்திரகாளியுடன் சிவபெருமானையும் உமாதேவியையும் வலம்வந்து வணங்கி, அவர்களெதிரில் கைகூப்பி நின்று, "எந்தாய்! திருமாலையும் பிரமனையும் பிடித்துக்கொண்டு வந்து இங்கே நிறுத்தவோ? அல்லது கொடிய இயமனது உயிரை முடிக்கவோ? அல்லது, அசுரர் குலத்தைத் களைந் தெறிந்திடவோ? அல்லது தேவர்களையே அழித்துவிடவோ? கடல்சூழ் புவி முழுவதையும் விழுங்கிவிடவோ? அல்லது உயிர்த்தொகை யனைத்தையும் அழித்துத் துடைக்கவோ? அல்லது எல்லையற்ற அண்டங்களைப் பொடியாக்கிவிடவோ? தேவரீருடைய திருவடித் தாமரைகளை என் சென்னிமீது வைத்துக்கொண்டு எக்காரியமாயினும் செய்து முடிக்கிறேன். தேவரீர் என்னைச் சிருஷ்டித்தது எக்காரியத்துக்காக வென்று தெரிவித் தருளவேண்டும்" என்று மிகுந்த விநயத்துடன் கூறினன்.

அப்போது சிவபெருமான் வீரபத்திரரை நோக்கி, "தக்ஷன் எம்மை விலக்கி வேள்வி செய்கின்றான். அங்கு நீ சென்று எமக்குரிய அவிர்ப்பாகத்தைத் தாவென்று கேள். அவன் அதைக்கொடுத்தால்நீ இங்கு வந்துவிடுவாயாக! கொடுக்காவிட்டால், அவன் தலையினைக் கொய்து, அவனிடத்து அன்பு பாராட்டி அவனுடன் கூடியிருக்கும் அனைவரையும் அழித்து, அவன்புரியும் யாகத்தையும் கலைத்து விடுவாயாக! அச்சமயம் நாம் அங்குவந்து சேர்வோம்! நீ இனி அங்கே செல்வாயாக!" என்று கட்டளையிட்டார். உடனே வீரபத்திரர் பத்திரகாளியுடன் முதல்வர் அம்பிகையிருவர் பாதங்களிலும் மெய்யன்புடன் வீழ்ந்து பணிந்து விடைபெற்றுக்கொண்டு அப்பாற் சென்று, எம்பெருமானை யிகழ்ந்த தக்ஷனை யழிக்கவேண்டுமென்று நினைத்துச் சீற்றங் கொண்டு, அந்த க்ஷணத்திலேயே தமது சுவாசத்தினுலும், வியர்வையினுலும், வாக்கினுலும், அக்கினியைக் கக்கும் நெற்றிக் கண்ணினுலும், சடாமுடியினுலும், தோளினுலும், தாளினுலும், கரங்களினுலும் எண்ணிறந்த வலிய பூதர்களைப் படைத்தார். அவ்வாறே பத்திரகாளி எல்லையற்ற காளிகளின் கூட்டத்தைச் சிருஷ்டித்தாள்.

அவ்வாறு தங்களால் உண்டாக்கப்பட்ட பூதர்களும் காளிகளும் தங்களை நெருங்கிச் சூழ்ந்து வெண்கொற்றக் குடைகளைத் தாங்கியும் சாமரைகளையும் வீசியும் பல ஆயுதங்களைக் கரங்களில் தரித்தும் யுகமுடிவில் கர்ச்சிக்கும் சமுத்திரங்களைப்போலக் கோஷித்து வர, வீரபத்திரரும்பத்திரகாளியும் வெள்ளியங்கிரியைவிட்டுப் புறப்பட்டுச்சென்று கங்கைக் கரையில்தக்ஷன் யாகஞ்செய்துகொண்டிருந்த யாகசாலையை யடைந்து, பூதர்களையும் காளிகளையும் அவ் யாகசாலையைச்சுற்றிப் பத்திரமாய்க் காவலாயிருக்கும்படி கட்டளையிட்டுவிட்டு, சில பூதர்களுடனும் காளிகளுடனும் யாகசாலைக்குள் நுழைந்தனர்.

அங்ஙனம் நுழைந்த வீரபத்திரரையும் பத்திரகாளியையும் பார்த்துப் பிரமன் முதலிய தேவர்கள் சிங்கத்தின் வரவைக்கண்ட மான்களின் கூட்டத்தைப் போலவும் தம்மீது

பேரிடி விழப்பெற்ற பாம்பின் கூட்டத்தைப் போலவும் அஞ்சி நடுங்கி, நகை நீங்கிய முகத்தினராகி வாடியொடுங்கி, "ஈசனுமை யிருவருடைய கோபத்தினாலுதித்த இவர்களின் சீற்றம் மிகவும் பெரிதாதலின், நம்முயிர்க்கெல்லாம் இன்று நாசமுண்டாகுமென்பது நிச்சயம். முக்கணெந்தையை யிகழ்ந்தவர்கள் அழியாமலுய்வது எங்ஙனம்?" என்று பலவாறாகப் பேசி, பூதர்கள் யாகசாலையைச் சுற்றி நெருங்கிச் சூழ்ந்திருந்ததைக்கண்டு தப்பியோடுவதற்கும் வழியில்லையேயென ஏங்கி, நெருங்கிச் சூழ்ந்த அக்கினியின் நடுவே அகப்பட்டுக் கொண்ட யானைகளைப்போலத் தவித்தார்கள்.

வீரபத்திரர் பத்திரையுடன் தக்ஷனிருந்த விடத்தையணுகி அவன் யாகஞ் செய்வதைக் கண்டு கடுங்கோபத்துடன் தீப்பொறி பறக்க அவனை விழித்துப் பார்த்துக் கர்ச்சித்து வெற்றிக் கொம்பினை முழக்கினார். அதன் பேரொலியைக்கேட்டுத்தேவர்களும்முனிவர்களும்மிக்க அஞ்சி நடுங்கினர். தக்ஷன் தன்னெதிரே நிற்கும் வீரபத்திரரைக்கண்டு நடுங்கி மனந்தளர்ந்து,வெளிப்புறத்தில்பூதர்கள்சூழ்ந்துநின்றதையும், யாகசாலையிலுள்ள வானவர்கள் யாவரும் அயர்ச்சி யடைந்ததையும் கண்டு பெருந்துயருற்றுப் பிறகு தன்னைத் தானே சிறிது தேற்றிக்கொண்டு, மிகுந்த வலிமை வாய்ந்தவன் போல நடித்து, வீரபத்திரரை நோக்கி, "நீ யாவன்? நீ இங்கு வந்த காரணமென்ன?" என்று வினவினான். அதற்கு வீரபத்திரர், "தக்ஷனே! நான் சங்கரனுடைய புதல்வன்! நீ இயற்றும் யாகத்தில் அவருக்கு அளிக்க வேண்டிய அவிர்ப்பாகத்தை என்னிடம் தருவாயாக! அதைப் பெற்றுக்கொண்டு போவதற்காகவே அப்புங்கவனருளால் இங்கு வந்தேன்!" என மறுமொழி புகன்றார். அப்போது தக்ஷன், "உங்கள் நாயகனுக்கு இனி உலகம் வேள்வியிலுள்ள அவிர்ப்பாகத்தைக் கொடுக்காது!" என்று கூறினான். அம்மொழிகள் அவன் வாயிலிருந்து வந்தவுடன், அங்கிருந்த நான்கு வேதங்களும் தூய்மைமிக்க பிரணவமும் திடுக்கிட்டெழுந்து நின்று, "எல்லையில்லாத உயிர்த்தொகைக் கெல்லாம் இறைவனாகிய சங்கரனல்லாது யாகத்துக்கு நாயகனாகவிருக்குந் தகைமை வாய்ந்தோன் வேறொரு தேவனுண்டோ? கிடையாதாதலால், அவருக்குரிய அவிர்ப்பாகத்தைக் காலதாமதஞ்செய்யாமற் கொடுப்பாயாக!" என்று தக்ஷனுக்கு நற்புத்தி யுரைத்தன. அதுகேட்டும் தக்ஷன் எமதிறைவனுக்கு அவிர்ப்பாக மளிக்காமல் வாளாவிருந்ததைக் கண்டு, அவைகள் அவ்விடம்விட் டகன்று தத்தம் இருப்பிடங்களுக்குச் சென்றன.

அவ்வாறு அவைகள் அவ்விடம் விட்டு அகன்றபின், வீரபத்திரர், "தக்ஷனே! வேதங்களும் பிரணவமும் கூறிய மெய்ப்பொருளைக் கேட்டனை. இனியேனும் எம்பெருமானுக்குரிய அவிர்ப்பாகத்தை யளிப்பாயாக!" என்று இன்னொருமுறை கருணையினால் தக்ஷனைக் கேட்டருளினார். அதற்குத் தக்ஷன், "சுடுகாட்டில் பேய்களுடன் ஆடல்செய்யும் பித்தனுக்கு நான் அவிர்ப்பாகம் அளிக்கமாட்டேன்" என்று கூறினான்.

அதுகேட்டு வீரபத்திரர் அருகே சூழ்ந்து அமர்ந்திருந்த பிரமன் முதலாயினோரை நோக்கி, "நீங்களும் இவன் சார்பிலிருக்கிறீர்கள் போலும்! இவன் நிமலராகிய எம்பெருமானுக்கு அவிர்ப்பாகம் அளிக்காமல் அவரை இகழ்வது உங்களுக்குச் சம்மதந்தானோ?" என்று கேட்டார். தீவினைப்பயனை அனுபவிக்குங்காலம் நெருங்கப்பெற்ற தேவர்கள் அவர் கூறிய மொழிகள் தங்கள் செவிகளிற் படாதது போல சும்மாவிருந்தார்கள். அதுகண்டு வீரபத்திரர் கடுஞ்சினங்கொண்டு அழகிய வக்கிரதந்தங்கள் விளங்க நகைத்து, பெரிய கதையொன்றினால் தக்ஷனது மலைபோலகன்ற மார்பு பிளவுபடுமாறு அடித்தார். தக்ஷன் உளம் நடுங்கித் திருமாலின்முன் வீழ்ந்தான். பிறகு வீரபத்திரர் பிரமதேவரது தலையில் இடிவிழுந்தாற்போல் ஒருகையினாற் குட்டினார். பிரமதேவர் மூர்ச்சித்து வீரபத்திரர் பாதங்களில் வீழ்ந்தார். அதுகண்ட தேவர்கள் நடுங்கிப்பதைத்து ஓடி யொளிதலுகொள்ள முயன்றனர். வீரபத்திரரோ ஓடும் தேவர்களைப் பிடித்து மாய்த்தார்.

இதையெல்லாம் தக்ஷன் கண்டு மெய்யுணர்ச்சி திரும்பவும் பெற்று, முன்னாளில் தனது அரிய மெய்த்தவத்துக்குகந்து தனக்கு வரம் பல வளங்களளித்த சர்வேசுவரனை முக்கணெந்தையைத் தான் இகழ்ந்த பாவத்தினால் தனக்கேயன்றித் தேவர்களுக்கும் முனிவர்க

ளுக்கும் மற்றும்பலருக்கும் கொடியநாசமுண்டாக நேர்ந்ததை யுன்னி, மிகவும் துயருற்று யாகசாலையைச் சூழ்ந்துள்ள பூதர்களைத் தாண்டி ஓடுவது அரிதெனவுணர்ந்து, ஒப்பற்ற திறலினையுடைய வீரபத்திரருக்கு எதிரே போய் வலிமை யுடையாரைப்போல நிற்பதே தகுதியெனத் தேர்ந்து, அவர்முன் போய் நின்றான். அதுகண்ட வீரபத்திரர், "தேவர்களுடன் கூடி நீ ஈசனை இகழ்ந்தாய்! அதற்கு இதுவே தண்டனை!" என்று கூறித் தமது வாளினால் அவன் சிரத்தைத் துணித்து, அவன் தலை கீழே விழுமுன் அதைப் பிடித்து அங்கு எரிந்துகொண்டிருந்த தீயிலிட்டார். கணப்பொழுதில் தக்ஷன் தலை நீறாயிற்று.

அதுகண்டு மனந்துடித்துப் பதைத்து தக்ஷன் மனைவியர்களான வேதவல்லி முதலாயினோரும் அவனது மகளிரும் தமது கூந்தல விழ்ந்து தரையிற் புரள தமது செவ்விய கரங்களைத் துயர மிகுதியினால் உதறிக்கொண்டும் புலம்பிக்கொண்டும் அவ்விடத்தை யணுகினர். அப்போது பத்திரகாளி முன்சென்று வேதவல்லியின் காதுகளை யறுத்துப் பின்னர் ஏனையோரைக் கொன்றாள். பிறகு வீரபத்திரரும் பத்திரையுமாகச் சேர்ந்து ஏனைய தேவர்களையும் தேவமாதர்களையும் கொன்று அழித்தனர். பூதர்களும் யாகசாலைக்குள் நுழைந்து யாவரையும் அழித்தனர்.

அவ்வாறு யாவரும் அழிந்து யாகமும் அழிந்ததைக்கண்ட திருமால் தக்ஷனால் யாகநாயகனாக அமர்த்திப் பூசிக்கப்பெற்ற தாம் அவ்யாகத்தினைக் காப்பாற்றமுடியாமற் போனதை யுன்னி வெட்கமுற்றுப் பிறகு சிவபெருமானை யிகழ்ந்தவருக்கு அத்தகைய தண்டனையே சித்திக்குமென்ற உண்மையை மாயையின் வலிமையினால் அறியமாட்டாது பயங்கிக் கோபங்கொண்டு, வெற்றிவீரராக விளங்கிய வீரபத்திரருடன் போர்புரியக்கருதி கருடனை நினைத்தார். வீரபத்திரருக்கு அஞ்சிக் கருடன் அங்கு வராமலிருக்கவே, திருமால் தமது கோபாக்கினியினால் ஒரு கருடனை யுண்டாக்கி, அக்கருடன்மீதேறி பஞ்சாயுதங்களைக் கரங்களிலேந்திக்கொண்டு யாகசாலையிலுள்ள பூதர்கள்மீது கோபத்துடன் சென்று வில்லைவளைத்து அவர்கள்மீது எண்ணிறந்த பாணங்களை விடுத்தார். பூதர்களுங் கூடி அம்புகளைக் கூட்டங் கூட்டமாகத் திருமாலின்மேல் விடுத்தனர்.

திருமால் தமது பூதப்படையுடன் போர்புரிவதைக்கண்ட வீரபத்திரர்நகைத்து, அவருடன் தாமே போர்புரிய வேண்டுமென நினைத்தார். அவ்வாறு அவர் நினைத்த மாத்திரத்தில், ஆயிரங்குதிரைகளாக உருவங்கொண்ட வேதங்களினால் இழுக்கப்பெற்றதும், எண்ணிறந்த கொடிகளும் சிறந்த படைக்கலங்களும் தன் மீதிருக்கப்பெற்றதுமான புவியினு மகன்ற தேரொன்று எம்பெருமானருளினால் அங்கு வந்து தோன்றிற்று. அப்போது மயக்கந் தெளிந்தெழுந்த பிரமதேவர் வீரபத்திரருடைய தயவைப் பெறுவதற்கு இதுவே நல்ல தருணமெனத் துணிந்து, அவ்விரதத்திலேறிச் சாரதியா யமர்ந்து அத்தேரை வீரபத்திரர் முன் கொண்டுபோய் நிறுத்தி, "பகைவரை வெல்லும் வெந்திற லுடையோய்! நின் துணைவியுடன் இவ்விரதத்திலேறி என் சாரத்தியத் திறத்தினைக் காண்பாயாக!" என்று கூறி, வீரபத்திரரும் பத்திரையும் அத்தேரின்மீது ஏறிக்கொண்டதும் அத்தேரைச் செலுத்தித் திருமாலின் முன்னர் கொண்டுபோய் நிறுத்தினார். அப்போது வீரபத்திரர் திரிபுர தகனஞ் செய்யச் சென்ற புராரியைப்போலவே விளங்கினார்.

தம்முன் அத்தேர் வந்து நின்றவுடன், திருமால் வீரபத்திரரை நோக்கி, "கங்கையமர்ந்த சடாமுடியையுடைய சிவபெருமானை யிகழ்ந்த தக்ஷனைக் கொன்றதுடன் நிறுத்திக்கொள்ளாமல், அவனருகிலிருந்த குற்றமற்ற தேவரனைவரையும் அழித்ததன் காரணமென்ன?" என்று வினவினர். அதுகேட்ட வீரபத்திரர், "ஆதியந்தமில்லாத பரமேசுவரனை யிகழ்ந்த தக்ஷன் இயற்றிய யாகத்தில் அவிர்ப்பாகம் பெற்றுக்கொண்டவர்களுக் கெல்லாம் வேதத்திற் கூறப்பட்டுள்ள தண்டனையையே விதித்தேன். நின்னையும் தொலைக்கப்போகிறேன். நினக்கு வலிமையுண்டாகில் காத்துக்கொள்!" என்றார்.

அம்மொழிகளைக் கேட்டுத் திருமால் வில்லை வளைத்து நாணேற்றி அம்புகளை மாரிபோற் பெய்தார். வீரபத்திரரும் தமது வில்லைவளைத்து நாணேற்றி அம்புக்கூட்டங்களைச் சரமாரியாகப் பொழிந்தார். இருவரும் தங்களிடத்திலுள்ள

அஸ்திர சஸ்திரங்க ளனைத்தினையும் உபயோகித்து நெடுநேரம் ஒருவரோடொருவர் கொடும்போர் புரிந்தனர். கடைசியில் திருமால் தமது சக்கரப்படையை வீரபத்திரர்மீது விடுத்தார். அவர் அதைப்பற்றித் தமது திருவாயிற் போட்டுக்கொண்டு விழுங்கினர். பிறகு திருமால் தமது கதையை எறிய, அவர் அதைத் தமது கரத்திலுள்ள தண்டத்தினால் தடுத்தார். அதுகண்டு கடுஞ்சினங்கொண்ட திருமால் தமது வாட்படையை யோங்கி வீரபத்திரரை வெட்டச்சென்றார். அப்போது வீரபத்திரக் கடவுள்கோபத்துடன் ஹூங்காரஞ் செய்தார். உடனே உலகினையுண்டு கடலின்மீது கண்துயிலும் மாயவன் செயலற்றுக் கையும் வாளுமாகச் சித்திரம்போல் நின்றார். அவ்வாறு மாயவன் அச்சமுற்றுத் தளர்ந்தகாலத்தில், வீரபத்திரர் யாதுகாரணத்தினலோ மூனிவுற்றார். உடனே "மிக்க கோபத்தினை விட்டுவிடு!" என்ற கண்ணுதலின் சொல்லொன்று விசும்பில் கேட்டது. அச்சொல்லைக் கேட்டதும் வீரபத்திரர் தமது கோபத்தைத் தவிர்த்து நின்றார். அச்சமயத்தில் பிரமன் அவர் பாதங்களைப்பணிந்து, தாம் தக்ஷன் வேள்விக்குச் சென்று அவிர்ப்பாகம் பெற்றுக்கொண்ட குற்றத்தினை மன்னித்து விடும்படி வேண்டினர். வீரபத்திரர் கருணையினால், "அவ்வாறே யாகுக!" என மொழிந்தார்.

அப்போது திருமால் வீரபத்திரருடைய கருணை மிகுதியைக்கண்டு திடங்கொண்டு, அவரை நோக்கி, "என் வில்லையொடித்து, எனது சிறந்த ஆயுதங்கள் பலவற்றையு மழித்து, என் சக்கரத்தையும் விழுங்கி என்னை வென்று வாகைமாலை யணிந்த ஒப்பற்ற வெற்றிவீரனே! நின் தகைமை முழுவதையும் எடுத்துரைக்க வல்லார் எவருமிலர். ஈசனையிகழ்ந்த தக்ஷன் செய்தபூசனையைவிரும்பிவேள்விக்குச்சென்ற என்னைத் தேவரீர் தண்டித்தது நீதியேயாகும். இனி என் குற்றத்தினைத்தேவரீர் பொறுத்தருள் புரிய வேண்டும்" என்று கூறினர். திருமால் கூறிய வசனங்களைக் கேட்டு வீரபத்திரர் கருணைபூண்டு அவரை யணுகினர். அச்சமயத்தில் சிவபெருமான் பூதர்கள் சூழ நந்திதேவர் வணங்க உமாதேவியாருடன் இடபவாகனத்தின்மீதுவந்து யாவருங்கண்டு உய்யுமாறு திவ்விய தர்சனமளித்தார்.

உடனே வீரபத்திரர் அச்சத்துடன் எம்பெருமானை யணுகிக் கைகுவித்துத் தொழுது நின்றார். திருமாலும் பிரமதேவரும் எம்பெருமானது பாதங்களை வணங்கி, நீங்கிய தாயைத் திரும்பவும் பெற்ற குழந்தையின் தன்மையராய் நின்றார்.

அப்போது உமாதேவி வேள்விச் சாலையில் தேவர்களும், தக்ஷனும், தேவமாதர்களும், முனிவர்களும் இறந்து கிடந்ததைக் கண்டு கோபம் நீங்கி அருள்கொண்டு எம்பெருமானை நோக்கி, "எந்தாய்! இவ்வேள்வியைச் செய்த தக்ஷனுக்கும் தேவர்களுக்கும் என்னால் நாசமுண்டாயிற்று என்று உலகத்தார் கூறுவார்கள். தேவரீருடைய மெய்ந்நிலையை யுணராமல் தவறுசெய்த இவர்களுக்குத்தகுந்த தண்டனை நமது வீரத் திருமகனாற் கிடைத்துவிட்டது. முன்னர் இவர்களை யழிக்கவேண்டுமென நான் விரும்பிய வரத்தை யளித்ததுபோலவே, அவர்கள் குறைநீங்கி உயிர்பெற் றெழுமாறு இப்போது ஓர் வரம் தந்தருள வேண்டும்!" எனக் கூறினள்.

எம்பெருமான், "உமையே! உன் கருணை வியக்கத்தக்கதே!" எனக் கூறி நகைத்து, வீரபத்திரரை நோக்கி, "புருஷன் என்னும் பெயரை வகிக்கத் தகைமையுடையோனே! இங்கு எம்மையிகழ்ந்து நின் கோபத்தினால் மாண்டு சிதைந்துபோன வலியற்றவர்களுக்கு நீ மீண்டும் உயிரை யளித்து அவர்கள் தமது பழைய உருவங்களைப் பெறும்படி செய்வாயாக!" எனக் கட்டளையிட்டார். உடனே வீரபத்திரர், "இறந்தவர்கள் யாவரும் முன்னுளிற் போலவே உயிர்பெற் றெழுவீராக!" எனக் கூற, யாவரும் துயிலினின்று எழுபவரைப் போல எழுந்துநின்று எம்பெருமானை வானத்திற் கண்டு தமது குற்றத்தை யுன்னி நடுங்கினர். அதுகண்ட எம்பெருமான் தம்மையன்றி அவர்களுக்கு வேறு கதியில்லாததை யெண்ணி, அஞ்சாதீர் என்று திருவாய் மலர்ந்தருளினர். அவரது கருணையைக்கண்டு யாவரும் மனங்கசிந்து அவரது பாதங்களில் வணங்கித் துதித்தனர்.

அப்போது வீரபத்திரருடைய கருணைமொழியினால் யாவரும் உயிர்த்தெழ தக்ஷன்மட்டும் எழாததைக் கண்டு பிரமன், எம்பெருமான் திருவடிகளை வணங்கி, "அறிவிலியான தக்ஷ

னுடைய அகங்காரத்தை யழித்து, அவன் நரகத்துக்குச் செல்லாமற் காப்பாற்றினீர்! எங்களைப்போலவே அவனும் உயிர்த்தெழுமாறு அருள் புரியவேண்டும் "என்று கூறினன்.

உமைபாகன் கருணை கூர்ந்து "அப்படியே யாகுக!" எனத் திருவாய்மலர்ந்தருள, வீரபத்திரர் பானுகம்பனை யழைத்து தலையில்லாத் தக்ஷனுடலத்தைக் கொணரும்படி கட்டளையிட்டார். அவ்வுடலம் கொண்டுவரப்பட்டவுடன், வீரபத்திரர் அவ் யாகத்திற் கொல்லப்பட்ட ஆடொன்றின் தலையைக் கொண்டுவரச் சொல்லி, அத்தலையை அவ்வுடலத்திற் பொருத்தி, "வேதங்கள் முதல்வனெனப் போற்றும் பரமேசுவரனை இகழ்பவரெல்லோரும் அடையும் கதி இதுவே!" எனக் கூறி, அத்தலையை நோக்கி, "தக்ஷனே! எழுக!" என்றார்.

உடனே தக்ஷன் உயிர்பெற்றெழுந்து, தன் முன் நின்ற வீரபத்திரரைக்கண்டு அச்சமுற்று தன் தகைமையிழந்து தான் பெற்ற அற்பத் தலை யின்னதென வுணர்ந்து வெட்கித் தலை குனிந்து, அன்று நடந்தவற்றை யெல்லாம் நினைத்துத் துயர்க்கடலில் மூழ்கினன். அச் சமயத்தில் சிவபெருமானும் உலகமாதாவும் அங்கு விஜயஞ் செய்திருந்ததைக் கண்ணுற்று அவன் மிகவும் அச்சமுற்று, தேகம் நடுங்க நின்றான். அதுகண்ட எமது அண்ணல், "தக்ஷனே! இனி நீ அஞ்சாதே!" என்று கூறியருளினர்.

அப்போது தக்ஷன் எமதிறைவன் முன்னர் சென்று அவரடிகளில் வீழ்ந்து பணிந்தெழுந்து கரங்களைச் சிரமேற் குவித்துநின்று, "எனதிறைவனே! தீயனேன் செய்த தீவினைகள் மனத்தினாலும் அளப்பது அரிதாதலின், அவைகளைப்பற்றி நினைக்குந்தோறும் அவைகள் என் நெஞ்சத்தைச் சுடுகின்றன. தேவரீர் அத்தீவினைகளை யகற்றி எனக்குப் பேரருள் புரிந்ததனால் அடியேன் உய்ந்தேன். தேவரீர் செய்த பெருமாயையினால்தான் சிறியனேன் மதிமயங்கித் திருமாலைத் துணையாகக் கருதி நுமது திருவடிகளை யிகழ்ந்தேனாதலின் பாவியேன் பிழையைப் பொறுத்தருளவேண்டும்" என்று கூறி, எம்பிரானைத் துதித்தான்.

எம்பெருமான் அப்போது அங்கு கூடிநின்ற தேவர்களை நோக்கி, "தேவர்காள்! நீவிர் தக்ஷனது யாகத்தில் எம்மை யிகழ்ந்து துன்புற்றதெல்லாம் முந்தைவினையின் பயனே யாகும். நுமக்கு யாம் தண்டனை விதித்தது இவ்வுலக வழக்கத்துக்கேற்கச் செய்ததாகும். ஆதலால் அவைகளை நினைத்து வெட்கமுற்று வருந்தாதேயுங்கள்" என்று கூறியருளினர். தம்மை அன்புடன் நினையாதவர்மீதும் தமது கடைக்கணோக்கத்தைச் செலுத்தி யருள்புரியும் இயல்புடையவரான நிமலன் அவ்வாறு அருள்புரிந்ததும், தேவர்கள் யாவரும் எம்பெருமானையும் எம் அன்னையையும் வீரபத்திரக்கடவுளையும் அன்பொடு வணங்கித் துதித்தனர்.

பிறகு எம்பெருமான் வீரபத்திரரும் பத்திரகாளியும் தமதருகில் வரவும், நந்திதேவர் முன்னேசெல்லவும், பூதகணங்கள் எங்கும் பரவித் தம்மைச் சூழ்ந்துவரவும் உமாதேவியாருடன் சிறந்த இடபத்தின்மீது திருக்கைலாயத்துக்கு ஏகினர். திருக்கைலாயத்தை யடைந்து திருக்கோவிலிலுள்ள சபையி லெழுந்தருளிய பின், எந்தை வீரபத்திரருக்கும் பத்திரைக்கும் வானுலகத்தில் ஒரு சிறந்த பதவியை யளித்து, அங்குசென்று வசிக்கும்படி அனுக்கிரகித்தார். அவர்கள் திருக்கைலையை விட்டுத் தம்முலகுக்குச் சென்று சுகமாக வாழ்ந்துவந்தனர்.

எம்பெருமான் அவ் யாகசாலையை விட்டகன்றபின், பிரமதேவர் தாமும் திருமாலும் தாமே பரம்பொருளென இருவரும் மயங்கி ஒருவரோடொருவர் நெடுநாட் போர்புரிந்ததையும், பிறகு மகா சிவராத்திரியில் சிவபெருமான் அவர்களிருக்கு மிடையே செந்தழல் மலையேபோலத் தோன்றி அவர்களிருவரும் ஒருவர்மீ தொருவர் விடுத்த ஆயுதங்களனைத்தையும் தமக்குள் இழுத்துக்கொண்டு நின்றதையும், உடனே தாங்களிருவரும் கோபமொழிந்து, அச்சோதிமலையை யணுகாது தூரத்திலிருந்த வண்ணம் அதையே நோக்கி நின்றதையும், அச்சமயத்தில் 'முப்புரங்களை யெரித்த பரமன் காணுமாறு உங்களி லொருவர் அம்மலையின் அடியையும் மற்றொருவர் அதன் முடியையும் கண்டுபிடித்து உங்கள் வல்லமையைக் காட்டுங்கள்' என ஒரு அசரீரி வாக்கு வானத்திற் பிறந்ததையும், அதைக் கேட்டதும் தாமும் மாயவனும் அதன் அடியையும் முடியையும் கண்டறிவோமெனச்

29. பூசாரி பூமுடிக்கப் போனாலும், பூ அலங்காடு பலாக்காடாய்ப் போச்சுதாம்.

சபதங் கூறிக்கொண்டு, மாயவன் பன்றியி னுருவத்தோடு அச்சோதியின் அடியைத் தேடவும், தாம் அன்னப்பறவையி னுருவத்துடன் அதன் முடியைத் தேடவும் புறப்பட்டுச் சென்று பன்னாள் முயன்று நொந்து வலியழிந்து அகந்தை யிழந்து மருள்நீங்கி அறிவு திரும்பப்பெற்று எம்பெருமானை முறைப்படி ஆராதித்ததையும், அப்போது அச்சோதி சுருங்கி ஓர் இலிங்க சொருபமான திருவருணாசல மலையாகித் தங்களுக்குத் திவ்விய தரிசனம் அளித்தருளியதையும் தமது மகனான தக்ஷனுக்கு வித்தாரமாக எடுத்துரைத்து, சிவபெருமானே தாயும் தந்தையும் குருவும் கடவுளும் தவமும் செல்வமும் யாவுமாதலால் அவரை அன்புடன் வணங்கி நற்கதி யடையும்படி சொல்லி நற்புத்தி கூறினார்.

அகந்தை யிழந்து அறிவடைந்த தக்ஷன் அம்மொழிகள் மெய்யென வுணர்ந்து, காசிக்குச் சென்று அங்கு சிவபெருமானுக்கு ஒரு திருக்கோயில் சமைப்பித்து, அதில் சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து ஆயிர வருஷ காலம் சிவாகமங்களிற் கூறியுள்ள விதிப்படி பூசனைசெய்து, அவனது பூசனைக்குகந்து எம்பெருமான் தோன்றவும் அவரது பாதங்களில் வீழ்ந்து அவரடிமலர்களிற் பொருந்தத்தக்க அன்பினைத் தந்தருளும்படி வேண்டி, எம்பெருமானது கருணையினால் அவரது கணநாதனாகவிருக்கும் பெருந்தகைமையைப் பெற்றுய்ந்தான்.

(217-ம் பக்கத் தொடர்ச்சி.)

அடியேன்மீதும் இரக்கம்வைத்து, அடியேன்உய்யும் பொருட்டு,] அடர்ந்தோங்கி வளர்ந்துள்ள பல சமயக்காடுகளில்வசித்துக்கொண்டு ஒருவரோடொருவர் மாறுபட்டுத் தங்கள் தங்கள் சமயமே உண்மையான சமயமெனத் தந்திரமாக வாதிப்பவர்கள் பெறமுடியாததும், நின்னை வழிபட்டவர்களல்லாது மற்றெவரும் கண்டறியாததும், ஒப்புயர்வற்றதும், நின் பாதாரவிந்தங்களில் அடியேனைச் சேர்க்கக்கூடியதுமான முத்திநெறி இதுவென அடியேனுக்கு உபதேசித்து, வண்டுகள் மொய்த்துப் பாடி உலவப்பெற்ற நறுமணம்வீசும் கடம்ப மலர்களாலாய மாலையையும் பைம்பொன்னாற் செய்த சதங்கைகளையும் அணிந்துள்ள நின் பாதத் தாமரைக ளிரண்டையும் அடியேனுக்கு அளித்த நின் பெருங் கருணையை ஒரு நாளும் விழிப்பு வேளையிலும் கனவிலும் மறக்கவே மாட்டேன்.

## தேரையர்-இரணவைத்திய நிபுணர்

## TERAYAR—MASTER OF SURGERY

தொல்காப்பியர் யாங்ஙனம் குடமுனியாகிய அகத்தியரிடம் இலக்கணம் பயின்ற மாணவர்களில் முதல்வரோ, அங்ஙனமே அவருடைய வைத்திய சாஸ்திரத்தில் நிபுணர் தேரையர். சாரீரம் நிதானம் சிகிச்சை முதலியன யாவும் கற்றவர். பதார்த்தகுண விசேஷங்களையெல்லாம் விளக்கிப் பதார்த்த குண விளக்கம் செய்தவர். நீர்க்குறி நெய்க்குறி மருத்து பாரதம் யமக வெண்பா முதலிய பதினான்கு நூல்கள் இவராற் செய்யப்பட்டன. இவர் செய்த வைத்திய நூல்கள், சிறந்த செந்தமிழ் நடையில் யமகம் மடக்கு திரிபு முதலிய வாய்ந்துள்ளன. இவருடைய பிறப்பு, வாழ்நாள், முடிவு இவைகளை விசாரிக்குமளவில் யாதொன்றும் புலப்படாவிடினும் அவர் வைத்தியரத்ன சிகாமணியென்று சொல்லுவதற்கு யாதொரு சந்தேகமும் இல்லை. பூர்வத்தில் இருந்த தேரர் என்கிற இவருடைய திருநாமம் தேரையர் என்று வழங்குவதற்கு வரலாறு ஒன்றுண்டு.

நோயின் கொடுமையினால் பெரிதும் துன்பமுற்ற ஒருவர் வலிபொறுக்கமாட்டாமல் அகத்தியமாமுனிவரைச்சரண்புக, அவர் அந்நோயாளியைத் தமக்கு அருகிலேயே வைத்துக்கொண்டு அவ்வியாதிக்குத் தம்மாலியன்றமட்டும் சிகிச்சைசெய்தும், அவர் முயற்சி பயனற்றதாய் விட்டது. இச்செய்தியானது அவர் மாணவராகிய தேரருக்குத் தெரிய, அவர் அந்நோயாளியைத் தமது பார்வையில் வைத்துக்கொண்டு தம்மாலியன்ற பிரயத்தனங்கள் யாவும் செய்தும் அவரைக் கொடிய பிணியினின்றும் நிவர்த்திக்கமுடியாமல் போய்விட்டது. வியாதிஸ்தரோ பிணியினால் அதிக வருத்தமுற்றார். தேரையர் யாது செய்வது என்றறியாமல் திகைத்து நெடுநேரம் யோசித்து நிற்கையில், அவர் நற்காலத்திற்கியையத் திடீரென்று பின்னல்போற் சுரேலென்று ஓர் யுக்தி அவர் மனத்தில் உதித்தது. பிணியாளியின் மண்டையைத் திறந்து பார்க்கவேண்டும் என்ற எண்ணம் மனத்தில் தோன்ற, உடனே அவர் நோயாளிக்கு மருந்து கொடுத்து மயக்கமுண்டாக்கி முறைப்படி மண்டையைத் திறந்து பார்த்தார். அப்போது அவர் அதிசயிக்கும்

படி தேரை (விஷமுள்ள ஒரு தவளை) ஒன்று அந்நோயாளியின் மண்டைக்குள் காணப்பட்டது. அத்தேரை நோயாளியின் மண்டைக்குள் மண்டையைக் கௌவிக்கொண்டும் குத்திக்கொண்டும் இடைவிடாமல் வலியைக் கொடுத்துக்கொண் டிருந்தது. அதனால் மூளையில் கலவரத்தையும் உண்டுபண்ணிக்கொண் டிருந்தது. அதை எடுக்க அவர் ஓர் உபாயம் செய்தார். அஜ்ஜெந்துவின் எதிரில் நீருள்ள ஒரு பாத்திரத்தை வைக்கவே, அது திடீரென்று அதில் குதித்து விழுந்துவிட்டது. அதை எடுத்துவிட்டு மண்டையை முன்போல மூடி ஆற்றிவிடவே, அந்நோயாளி சகல உபாதைகளும்நிவர்த்தியாய்ச் சுகமடைந்தான். இதனாலேயே இவர் தேரையர் என்கிற நாமம் படைத்தார். இம்மாதிரி ஆச்சரியத்தைத் தரத்தக்க வைத்தியம் கணக்கற்றவை இவரால் செய்யப்பட்டதை இவ்விடத்தில் வரைவது சாத்தியமில்லை.

தேரையரால் இயற்றப்பட்ட அநேக வைத்திய நூல்களில், சிகாமணி வெண்பா, நாடிக்கொத்து, நோயணுகாவிதி, நோயின்சாரம், கரிசல் ஆகிய இவைகளே அழியாதவைகளும் சிறந்தவைகளுமாம். இவருரைத்துள்ள சுகாதாரவழிகள் மிகவும் நன்மை பயக்கத்தக்கவை. அவைகளைக்குறித்தும் அவர் அநேக நூல்கள் இயற்றியிருக்கிறார். அவைகளில், ஒரு தினத்துக்கு இரண்டுவேளை போஜனம் போதுமென்றும், பகலில் தூங்கக்கூடாதென்றும், அடிக்கடி நீரருந்தல் கூடாதென்றும், வாழைப்பழம் புசிக்கக்கூடாதென்றும், நல்ல போஜனத்துக்குப் பிறகு அதிகதூரம் நடக்கக்கூடாதென்றும் அபிப்பிராயப்படுகிறார். இவர் செய்த நூல்களில் பதார்த்தகுண சிந்தாமணியானது மிகவும் சிறந்ததும் மேன்மை யுடையதுமானது. அது 1,800 பாடல்கள் அடங்கியுள்ளது. அவர் வைத்தியத்தில் மாத்திரம் தேர்ந்தவரன்று; இரசவாதவித்தையிலும் சிறந்தவர்.

யுகிமுனியானவர் தாமியற்றிய வைத்திய சிந்தாமணி என்னும் கிரந்தத்தில், தாம் தேரையரால் அடைந்த அனுபவத்தையும் ஞானத்தையும் சக்தியையும்பற்றி விபரமாய் எழுதியுள்ளார். இரணவைத்தியம் இந்தியாவிலும் பூர்வத்தில் உயர்வுபெற்றிருந்தது என்பதை இவர் சரித்திரம் நன்றாய் விளக்குகிறது.

## ப்ரும்மாண்ட அமைப்பும் காலசக்கரமும்

## THE STRUCTURE OF THE UNIVERSE —COSMIC CYCLES

### I

வானசாஸ்திர ஆராய்ச்சியால் நமக்குக் கிடைக்கும் பிரயோசனங்கள் பல. அவற்றுள் முக்கியமானவை, கோடானுகோடியாய் வானமுழுதும் அள்ளித் தெளித்திருக்கும் தாராகணங்கள் எவ்வித சுபாவமுள்ளவை யென்றும், எம்மாதிரி கட்டுப்பாட்டுடன் சஞ்சரித்துக்கொண் டிருக்கின்றன வென்றும் ஆராய்ந்து அறிவதனாலுண்டாகும் மனக்கிளர்ச்சியே. இவ்விஷயம் இப் பூவுலகின்கண்ணுள்ள வஸ்து விசாரத்தைப்போல அவ்வளவு சுலபமானதல்லவென்று சொல்லுவது மிகையாகும்.

நக்ஷத்திர ஆராய்ச்சி சம்பந்தப்பட்ட விஷயங்கள் ஒவ்வொன்றிலும் நிச்சயம் ஏற்படுவது சிரமம். ஆயினும், மேல்நாடுகளைச் சேர்ந்த பற்பல வானசாஸ்திரிகளின் புத்தி கூர்மையினாலும், விடாமுயற்சியினாலும், ஆராய்ச்சி சாதனங்களின் சிறப்பினாலும் நமக்குக்கிடைத்திருக்கும் விஷய லாபத்தால் நக்ஷத்திரங்களைப்பற்றிச் சில கோட்பாடுகளைத் தைரியமாய் நம்ப இடமுண்டா யிருக்கிறது. இவ்வித அனுமானங்களுக்கு சாதனமாயிருப்பது நக்ஷத்திரகோடிகளி லிருந்து நம்மிடம் வந்து சேரும் அவற்றின் ஒளியேயாகும்.

நமக்கும் நக்ஷத்திரங்களுக்கு மிருக்கும் தூரம் வாயினால் சொல்லிப்பார்க்கலாம், எழுத்தினால் எழுதிப் படிக்கலாம். ஆனால் அது மனத்தினால் தியானிக்கக்கூடாதபடி அவ்வளவு பெரிது. ஒளியின் அலைகள் ஒருசெகண்டில் (கைந்நொடிப் பொழுதில்) 1,80,000 மைல் தூரம் செல்வதாகச் சொல்லுகிறார்கள். சூரியனுக்கும் நமக்கும் உள்ள தூரம் ஏறக்குறைய $9\frac{1}{4}$ கோடி மைல். ஆகவே, சூரியனிடமிருந்து இந்த க்ஷணத்தில் கிரணம் ஒன்று கிளம்பினால், அது நம்மிடம் வந்துசேர 8 நிமிஷம் 21 செகண்டு ஆகிறதாம். இதே கணக்குப்படி நமக்கு வெகு சமீபத்திலிருப்பதாகச் சொல்லப்படும் *a* Centauris என்னும் நக்ஷத்திரத்திலிருந்து வரும் வெளிச்சம் நம்மிடம் வந்துசேர சுமார் மூன்றரைவருஷங்கள்

ஆகின்றனவாம். நமக்கு அதிகப் பரிச்சய முள்ள வடத்துருவ நக்ஷத்திரத்திலிருந்து நமக்கு ஒளிவர சுமார் 40 வருஷங்களாகின் றன. இந் நக்ஷத்திரம் திடீரென்று அணேந்து போனுல், அந்த சமாசாரம் நமக்கெட்ட இன் னும் 40 வருஷங்கள் பிடிக்கும். தாராகணங் களில் பெரும்பாலன இன்னும் அதிகமான தூரங்களி லிருக்கின்றன.

இதனுல் நாம் அறியவேண்டிய விஷயம்.—ஒரு நக்ஷத்திரத்தைப்பற்றி நாம் ஒரு சமயத் தில் ஆராய்வது அதன் அக்கால நிலைமையைப் பற்றியல்ல; அதன் தூரத்தை யனுசரித்து, வருஷக்கணக்காக வழியில் தாமதித்துவரும் அதன் ஒளி கொண்டுவரும் சரித்திரம், அத் தனே வருஷகாலத்துக்கு முன் அந்நக்ஷத்திரம் எவ்வாறிருந்த தென்பதைப் பற்றியதே.

ஆகையால் ஒரே க்ஷணத்தில் எல்லா நக்ஷத்திரங்களும் எந்த ஸ்திதியி லிருந்தன வென்று சொல்வது அசாத்தியம்.

மேற்சொன்ன நக்ஷத்திர ஆராய்ச்சியில் அமர்ந்திருப்பவர்களின் ஸ்திதியென்ன? அவர் களாவது ஸ்திரமான ஸ்தானங்களி லிருந்து நிதானிக்கிருர்களா? இல்லே. பூமி நாளுக் கொருமுறை தன்னேச்சுற்றிச் சுழல்கிறது. இப் படிச் சுழன்றுகொண்டே அது வருஷத்துக் கொருதரம் சூரியனேச் சுற்றுகிறது. அந்தச் சூரியனும் தன்னேச் சுற்றிவரும் கிரகங்களு டன், கிருத்திகை தாராகணத்தை மத்திய மாய்க்கொண்டு ஹாகுலேச மண்டலத்தை நோக்கி யோடி செல்வதாக ஊகிக்கப்படுகிறது. இம்மாதிரி பல சூரியர்கள் சுற்ற, அக்கிருத் திகா மண்டலம் வேறெந்தத் தாராகணத்தைச் சுற்றி யோடுகிறதோ? ஆகவே, மேற்சொன்ன சாஸ்திர வித்துவான்கள் சுத்த வெளியில் பல ஓட்டங்களின் கலப்பினுல் தூக்கிக் கொண்டு போகப் படுகிருர்கள். இப்படிச் சவாரிசெய்து கொண்டே தூரதிருஷ்டிக் கண்ணுடி, ஒளி யாராய்ச்சிக் கருவி முதலிய யந்திர சாதனங் களேக்கொண்டு, நக்ஷத்திரங்களின் சேஷ்டை களேயும், சுபாவங்களேயும், அவைகளினின்று வருஷக்கணக்காயும், நூற்றுண்டுக் கணக்கா யும் தங்களே நோக்கி யோடிவரும் ஒளியைப் பரீக்ஷித்து அறிய முயலுகிருர்கள்!

நாம் வேகமாய்ச் சென்றுகொண்டிருக்கும் ரயில் வண்டியின் ஜன்னல்கள் வழியாக இரு பக்கங்களி லிருக்கும் மரம், செடி, மலேகள் அவ்வண்டியி னேட்டத்திற்கு நேரெதிராக ஓடு வதாகக் காண்கிருேமல்லவா? அப்படியே பூமி தன்னேச்சுற்றிச் சுழலும் கதி, அது சூரியனேச் சுற்றிவரும் வருஷ ஓட்டம், சூரியமண்டலம் கிருத்திகை கணத்தைச்சுற்றி யோடும் வேகம் இவை யெல்லாவற்றின் கலப்பினுல், இப்பூமியி லிருந்து நாம் பார்க்கும் நக்ஷத்திரங்கள், நே ரெதிராய் நகர்ந்துகொண் டிருப்பதுபோல் காணப்படுகின்றனவென்று நிச்சயிக்கவேண்டி யிருக்கிறது.

பற்பல நூற்றுண்டுகளாக, நக்ஷத்திர சல னங்களேப் பரிசோதித்ததனுல் நமக்குக் கிடைத்திருக்கும் ஆதாரங்களே நாம் பரீக்ஷிக்கு மிடத்தில், ஒவ்வொரு நக்ஷத்திரமும் அதன் தூரத்துக்கும் பரிமாணத்துக்கும் தக்கவாறு ஸ்தானம் மாறியிருப்பதாகத் தெரியவருகிறது. இந்த இடம் மாறுதல் முழுதும் நாம் மேற் கூறிய காரணங்களினுல் அவைகளினுடை யதே என்று சொல்லக்கூடியதல்ல. ஆராய்ச்சி செய்பவனுடைய ஸ்தான பேதத்தினுலுண் டாகும் பாகத்தைத் தள்ளிப்பார்க்க ஒவ்வொரு நக்ஷத்திரமும் தானுகவே கொஞ்சம் நகர்ந் திருப்பதாகத் தெரிகிறது.

இப்படி எல்லா நக்ஷத்திரங்களின் சுய ஓட் டங்களே (Proper Motions) ஒப்பிட்டுப் பரி சோதிக்குமிடத்து கோடானுகோடி தாரா கணங்கள் பெரும்பான்மையும் இரு கக்ஷிக ளாகப் பிரிந்து ஒன்றையொன்று நோக்கி, மகாப் பிரயாணங்கள் செய்வதாக ஏற்படு கிறது.

இவ்விதம் ஒன்றையொன்று நோக்கிவரும் இருநக்ஷத்திரப் பிரவாகங்களிலடங்கிய (Star Streams) தாரகங்கள் ஒன்றையொன்று நெருங்கிவர நேரிட்டால், பரஸ்பர ஆகர்ஷண சக்தியினுல்இழுக்கப்பட்டுமோதிக்கொள்ளும். இதனுல் நூதன நக்ஷத்திரங்கள் காசரூபமாய் (Nebula) ஜனித்து, வரவர இறுகி தன்னேத் தானே நமது பூமி சுழல்வதுபோல சுழல ஆரம்பித்து, கிரகக் கூட்டங்களேப் பெற்று, சூரியமண்டலத்தைப்போல் காலத்தைக் கழிக் கின்றன. இதைப்பற்றிப் பின்னர் விஸ்தார மாய் எழுதுவோம்.

# வயது முதிர்ந்தவர்களுக்குப் பாடசாலைகள்

## CONTINUATION SCHOOLS FOR ADULTS

தற்காலத்தில் பொதுநன்மைக்காக உழைப்பவர்கள் பலரும் இராஜாங்கத்தாரும், சிறுவர் சிறுமிகளுக்குப் பிரதம வித்தியாப்பியாசம் செய்துவைக்க வேண்டுவது அத்தியாவசியமெனக் கருதி அதற்காக மிகவும் உழைத்து வருவது யாவரும் அறிந்த விஷயம். அவர்களுடைய அச்சிறந்த நோக்கத்துக்குக் காரணமென்னவெனில், நமது நாட்டிலுள்ள குடிகள் யாவரும் நமது நாட்டு விஷயங்களைக் குறித்து நன்றாய் ஆலோசித்து தங்கள் ஊக சக்தியின் தொகையினால் சிறந்த தீர்மானங்களைச் செய்தாலல்லது குடிகளுக்கு மிகுந்த நன்மையைத் தரத்தக்க மார்க்கத்தில் நாட்டுக் காரியங்கள் நடைபெறாவென்று அவர்கள் நன்றாய் அறிந்ததே யாகும். அவர்களுடைய அந்த நோக்கம் நாட்டுக்கு மிகுந்த நன்மையைத் தரத்தக்கதே யெனினும், நாட்டிலுள்ளோர் கல்வியைக் குறித்து மற்றுமொரு ஏற்பாட்டைச் செய்யாதொழிந்தால், அவர்களுடைய முயற்சி அவர்கள் கோரிய பலன் அவ்வளவையும் கொடுக்காமற்போக இடமிருக்கிறது. அவ்வேற்பாடு யாதெனில், பிரதம வித்தியாப்பியாசம் செய்வதுடன் கல்விப் பயிற்சியை முடித்துத் தொழிலிற் பிரவேசித்து வயது முதிர்ந்தவர்களுக்குக் கல்வி புகட்டுவதற்குரிய ஏற்பாடு தான்.

பொருளையும், வன்மையையும், காலத்தையும் மிக்கச் செலவழித்துப் பெற்றபிரதமக் கல்வியானது ஒருவன் பள்ளிக்கூடத்துக்குச் செல்லுங்காலம் கழிந்து தொழிலிற் பிரவேசித்தபின் அபிவிருத்தி செய்யப்படாமற் போவதனால், அக்கல்வியும் சீக்கிரம் அழிந்துபோய் அளவற்ற தீங்கை விளைவிக்கிறது. நமதுதேசத்தில்பள்ளிக்கூடங்களில் கல்விப்பயிற்சியடைபவர்களில் நூற்றுக்கு முப்பத்தொம்பதுபேர்கள் தாங்கள் பெற்ற கல்வியைப் பள்ளிக்கூடத்தை விட்டு ஐந்து வருஷ காலத்தில் இழந்துவிடுகிறார்களென்று கூறப்பட்டிருக்கிறது. இதன் உண்மையை விசாரிப்போம்.

மெட்ரிகுலேஷன் அல்லது ஸ்கூல் பைனல் பரீக்ஷையில் தேறியபின், ஒரு பையன் ஏதோவொரு வேலைக்கமர்ந்து, இளம்பருவத்திலேயே தானடைந்த பெருங் குடும்பபாரத்தைச் சுமந்து துன்புற்றுத் தியங்குகிறான். அச்சமயத்தில் அவன் தான் பெற்ற கல்வியை மேன்மேலும் அபிவிருத்தி செய்துகொள்ள வழியொன்று மில்லாமற் போகிறது.

பிரதமக் கல்வி பயின்ற ஒருவன் பள்ளிக்கூடத்தை விட்டுவிட்டு, வயிற்றை வளர்ப்பதற்காகச் சிறு வயதிலேயே ஏதோவொரு தொழிலிற் புகுந்து வேலைசெய்கிறான். தற்காலத்தில் நமது நாட்டில் நாளுக்குநாள் அதிகரித்து வரும் அச்சாபீஸ், நெசவு தொழிற் சாலை, பென்சில் தொழிற்சாலை, காகிதத் தொழிற்சாலை முதலியவைகளில் இயந்திரங்களே எல்லா வேலைகளையும் செய்துவருவதனாலேயும், அத்தொழிற்சாலைகளில் தலைவனாகவிருந்து நடத்துவோனைத் தவிர வேறெவரும் தங்கள் ஊகசக்தியை வேலையிற் செலுத்த அவசியமும் இடமு மில்லாமற் போகிறது. அத்தொழிற்சாலைகளி லுள்ளவர்களுக்குக் கொடுக்கப்படும் வேலையானது அவர்களுடைய புத்தியை உபயோகிப்பதற்கு ஒருபோதும் அவசிய முண்டாக்குகிறதில்லை. ஒரு பண்டத்தைச் செய்யும் வழி முழுவதையுங்கூட தொழிலாளிகள் எவரும் அறிவதில்லை. ஊசி செய்யும் தொழிற்சாலைகளில் வேலையாகவுள்ள சிலர் தங்கள் வாழ்நாள் முழுவதையும் ஊசிகளின் நுனியைக் கூராக்குவதிலேயே கழித்துவிடுகிறார்கள். இவ்வாறு நாம் கூறுவதனால், இயந்திரங்களை வைத்துப் பண்டங்கள் செய்வதையாவது ஒரு தொழிலுக்குரிய பல வேலைகளைப் பிரித்து அந்தந்த வேலையைத் திறத்துடன் செய்யும் வேலைக்காரர்களுக்குக் கொடுப்பதை யாவது நாம் கண்டிப்பதாக எண்ணக்கூடாது. இயந்திரங்களை உபயோகிப்பதானது மனிதர்கள் மெய்வருந்தக் கடினமான வேலைகளைச் செய்வதைப் பெரும்பான்மையும் குறைத்து, விடுகிறதே யெனினும், அது மனிதர்களையும் இயந்திரங்களின் பகுதிகளாகச் செய்யுமட்டில் அவர்களது பெருமையைக் குறைத்து அவர்கள் புத்தி விசாலமடைவதற்குச் சிறிதும் இடமில்லாமற் செய்துவிடுகிறது. இயந்திரங்களை உபயோகிக்கும் தொழிற்சாலைகளில் வேலைசெய்பவர்கள் தொழில் செய்யும்போது வேலைகளில் தங்கள் புத்தியை ஒரு சிறிதும்

உபயோகிக்காம லிருப்பதனுல், புத்தியை உபயோகிக்கவேண்டிய வேலைகளை வெறுக்க ஆரம்பிக்கிறார்கள். இப்படிப்பட்ட சுபாவமுடையவராய் அநேகர் இருப்பார்களாகில், அதனுல் ஜன சமூகத்துக்கு எவ்வளவு தீங்கு விளையும் என்பது சிறிது யோசிப்பவர்களுக்கும் எளிதில் விளங்கும். புத்தியை உபயோகித்தறியாதவர்கள் கையில், இராஜாங்க சம்பந்தமான விஷயங்களை ஒப்புவித்தால், நாட்டுக்குக் கேடு விளையுமென்பதும் யாவர்க்கும் எளிதில் விளங்கும்.

ஆகையினுல் நாட்டிலுள்ளவர்களால் நாட்டுக்கு நன்மையே உண்டாகவேண்டுமானுல், பாலசர்களுக்குப் பிரதமக் கல்வியை அளிப்பதுடன் நாம் திருப்தியடையாமல், அக்கல்வியைப் பயின்றவுடன் பள்ளிக்கூடத்தை விட்டுவிட்டு புத்தி விசாலமடைவதற்கு வழியில்லாத தொழில்களிற் பிரவேசிப்பவர்களுடைய அறிவு நாளுக்குநாள் அபிவிருத்தி யடைவதற்குரிய ஏற்பாடுகளை நாம் தேடிச் செய்யவேண்டுவது அவசியமாகிறது.

நவீன நாகரிகத்திற் சிறந்த நாடுகளிலெல்லாம் அதற்குரிய ஏற்பாடுகள் பல செய்யப்பட்டிருக்கின்றன. இராக்காலங்களில் பள்ளிக்கூடங்கள் வைத்து நடத்தியும் விடுமுறை நாட்களில் அநேக விஷயங்களைப்பற்றிப் பிரசங்கங்கள் செய்வித்தும், சினிமா பயாஸ்கோப் இவைகளின் உதவியினுல் பல அரிய விஷயங்களைக் கண்ணுக்கு நேராகக் காட்டி ஒப்பற்ற போதகம் புகட்டுவித்தும் அந்நாடுகள் தங்கள் எளிய குடிகளுக்கு ஆயுள் முழுவதும் கல்வி அபிவிருத்திசெய்து அவர்களை உபயோகமுள்ள குடிகளாக்குகின்றன.

மேல் படிப்பு படித்தவர்களும் பி. ஏ., எம். ஏ., பி. எல்., முதலிய பட்டங்களைப் பெறுவதையே கல்வி கற்பதன் நோக்கமாகக் கருதாமல், அப்பட்டங்களைப் பெற்றுக் கல்லூரிகளை விட்டுத் தொழில்களைக் கைக்கொண்ட பின்புதான், தமது கல்வி அபிவிருத்திகாலம் தொடங்குகிறது என்பதை நன்ருய் அறிந்துகொள்ளவேண்டும். பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் படிக்குங் காலங்களில் இஷ்டமில்லாமல் ஆழ்ந்து பாராமல் கற்றுக்கொண்ட பல விஷயங்களின் பிரயோசனம் வயது முதிர்ந்து தொழில்களிற் பிரவேசித்துத் தமது கல்வியைப் பிரயோகிக்க வேண்டிய காலத்தில்தான் மனிதர்களுக்கு விளங்க ஆரம்பிக்கிறது. இளம் பருவத்தில் புத்தகத்தில் படிக்கும்போது விளங்காத பல அரிய விஷயங்கள் வயது முதிர்ந்து தொழில் செய்து ஜனசமூகத்தில் பழகும்போதுதான் விளங்கத் தொடங்குகின்றன. அப்போது மனிதர் தமக்கு ஏற்படும் சந்தேகங்களை நிவர்த்தித்துக்கொள்ளப் போதுமான அறிவு இல்லாதவர்களாயிருப்பாராயின், அவர் படக்கூடிய பாட்டிற்கு அளவேயிராது. பிரதமக்கல்விப் பயிற்சியுடன் நிறுத்திக்கொண்டவர் கதி அச்சந்தர்ப்பங்களில் அதோகதிதான்.

ஆகையினுல் பிரதமக்கல்விப் பயிற்சி விஷயத்தில் எல்லையற்ற முயற்சிசெய்து பொருளை ஏராளமாய்ச் செலவுசெய்யும் நமது இராஜாங்கத்தாரும் பொதுஜன நன்மைக்கு உழைக்கும் பெரியோர்களும் நாட்டுக் கல்வியின் இந்த அமிசத்தை பிரதமக் கல்வியைவிட மிகவும் முக்கியமானதாகக் கருதி, இந்த அமிசமும் அபிவிருத்தி யடையச்செய்து, வயது முதிர்ந்தோரை அறிவிலும் முதிர்ந்தோராக்குமாறு நமது நாட்டின் தற்கால நிலைமைக்கும் பழக்க வழக்கங்களுக்கும் தக்க ஏற்பாடுகளைச் செய்வார்களென பரிபூரணமாய் நம்புகிறேம். அஞ்ஞானமே சகலவிதமான பாபச் செயல்களுக்கும் காரணமாதலால், அறிவைப் புகட்டுவதில் ஏராளமான பொருளைச் செலவழிப்பது கடைசியில் புலவழிகளில் நமக்கு நன்மையைப் பயக்குமென்று சொல்வது மிகையாகும்.

"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டு
கண்ணென்ப வாழு முயிர்க்கு" [டுரு

என்ற நீதிவாக்கியத்தின்படி மானிடருக்கு எண்ணுமெழுத்துமே கண்களாகக் கருதப்படுவதாலும்,

"தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு"

என்ற நீதிவாக்கியத்தின்படி, ஒருவருடைய அறிவு அவர் கற்ற கல்வியின் அளவேயாகுமாதலால், நமது நாட்டிலுள்ள பெரியோர்கள் வயது முதிர்ந்தவர்களுக்குக் கல்வி புகட்டுவதற்குரிய ஏற்பாடுகளைச் செய்வதில் பெருமுயற்சி செய்யச் சித்தம் வைக்கவேண்டுமென்று பிரார்த்திக்கிறேம்.

# பாடலீபுத்ர நகரம்

## THE CITY OF PATNA

பாடலீபுத்ர மென்னும் சிறந்த நகரம் நமது நாட்டு நகரங்களி லெல்லாம் மிக்கப் பிரசித்திபெற்றதும், அநேக ராஜவம்சங்களுக் கிருப்பிடமாயு மிருந்தது; அந்நகரத்தின் சரித்திரத்தை அறியவேண்டுமாயின், 2000 வருடங்களுக்குமுன் அஜாதசத்ரு என்ற அரசன் ஆண்ட நாளில் அப்பட்டணமிருந்த ஸ்திதியைப்பற்றியும், பிறகு ஆயிரக்கணக்கான வருடங்களில் நாளதுவரை அதற்குநேர்ந்த மாறுதல்கள், அதில் அரசுபுரிந்த ராஜவம்சங்கள் முதலியவைகளைப் பற்றியும் விசாரிப்ப தவசியம். இப்போது காணும் பாடலீபுத்ர நகரம் ஆதியில் காணப்பட்டஸ்திதியினின்றும் முற்றிலும் வேறுபட்டதாகும். பாடலீபுத்ர மென்பதற்குப் பொருள் பாடலீயென்ற ஒருமடல் ரோஜாவின் (என்றும் குன்றாத) மகன் என்பதேயாம். மற்றத் தேசங்கள் தங்களுக்குள்ள சுந்தரமான ரோஜா புஷ்பங்களைநினைத்துப் பெருமை பாராட்டுமாயின், நாம் நமக்கென்றமைந்த மனோகரமான வீமந்தி அல்லது பாடலீ புஷ்பத்தால் திருப்தியடைவோம். அக்பர் சக்கரவர்த்தி பிறந்தபோது உமாயூன் கஸ்தூரி தானம் செய்தானென்று கேள்விப்படுகிறோம். அதற்குக்காரணம் யாதென்று விசாரிப்போமாயின், பிறந்த அக்பரின் கீர்த்தி கஸ்தூரியின் சுகந்தம் பரவுதல்போல் வியாபிக்க வேண்டுமென்று அத்தானஞ் செய்யப்பட்டதென்று ஏற்படுகிறது; அதைப்போலவே எங்கும் பரவி தன் சுகந்தத்தால் பரிமளிக்கச்செய்கிற பாடலீயையே தாயாகக்கொண்ட பாடலீபுத்ர நகரம் கீர்த்தியில் உலகப்பிரசித்தி பெற்றதாயிற்று.

உலகத்தில் யாவருமறிந்த புராதன நகரங்களான நினீவா, பாபிலோன், பர்சிபோலிஸ், எக்பதன், டமாஸ்கஸ், டைர் முதலானவைகளைப் போல் பாடலீபுத்ர நகரம் அவ்வளவு புராதனமாயில்லாவிடினும் ஆசியாக் கண்டத்திலுள்ள நகரங்களெல்லாவற்றிலும் ஒருமிக்க பழய நகரமென்றே கூறலாம்.

உலகத்தில் மற்றப் பெரிய நகரங்களெல்லாம் உருமாறி அழிந்து கிடக்கும்போது பாடலீபுத்ர நகரம் மட்டில் செழித்து ஜீவநகரமாக விளங்குகின்றது. இந்நகரத்தின் ஆதிக் கதைகளை நாம் எளிதில் அறியக்கூடும். இதன் ஆதிகாலத்தைப்பற்றி விசாரிக்கும் போது, மாநிடப் பிறவி கொண்டவர்களி லெல்லாம் சிறந்தவரான கபிலவஸ்துவைச் சேர்ந்த புத்த ததாகதரென்ற புருட சிம்மத்தின் ஜீவியகாலம் நினைவுக்கு வருகின்றது. அம்மகான் நாலிருபதாண்டு கழித்த ஞானவயதில் ராஜக்கிருகத்திலிருந்து தன் ஜனன க்ஷேத்திரமாகிய கபிலவஸ்துவை யடைந்து சமாதி தசையைக் கழிக்க எண்ணிப் போகையில், வழியில் ஸோன் என்ற நதி கங்கையுடன் ஸங்கமமாகு மிடத்தைக் கடக்க நேரிட்டது, அங்கே மகததேசத்தரசனுகிய அஜாதசத்ருவின் மந்திரியொருவர், கங்கைக்கு அக்கரையில் பிரபலமாய் ஆண்டுகொண்டு போர்புரிவதே தொழிலாயுடைய லிச்சாவிகள், விதேயர்கள் என்ற ஜாதியார் களைவிலக்கிப் பயமுறுத்தும்பொருட்டு கோட்டை, மதிட்சுவர் முதலானவற்றைக் கட்டிக்கொண் டிருந்தனர். மகா புத்திமானும், தீர்க்கதரிசியும், மகத தேசத்தைச்சுற்றி நாலா பக்கங்களிலும் 45 வருடங்கள் திரிந்து பார்த்தவருமானபடியால், அவர் அவ்விடம் உலகெங்கும் பிரசித்திபெற்று உத்தமோத்தமமான ராஜநகரமாகுமென்று, தம் ஞானதிருஷ்டியால் கண்டு வெளியிட்டார். அவர் சொன்னபடியே, அதே இடம் வெகு சீக்கிரத்தில் ஒரு பெரிய வியாபார ஸ்தானமாகவும், இராஜபட்டணமாகவும் ஆயிற்று. மகத தேசத்துச் சக்காவர்த்திகள் ராஜக்கிருகத்திலும், பாடலீபுத்ரத்திலும் இங்குமங்குமா யிருந்து சிலகாலம் கழித்துவந்தார்கள். ஆனல் நந்தன் சிசுநாக வம்சத்தைத் தலையோங்காமல் அடித்து க்ஷத்திரியர்களையே முற்றுமழிக்க முயன்றபோது, ராஜக்கிருகத்தில் தங்குவதே நரகவாசத்தை யொத்ததாயிற்று. அதே காரணமாய் அவர் பாடலீபுத்ரத்திலேயே வசித்துவந்து, அதைத் தம் இராஜதானிப் பட்டண மாக்கிக்கொண்டார். புராதன ராஜநகரமான ராஜக்கிருகமோ காடடர்ந்து வசிப்பதற்கே தகாததாயிற்று. புராணக் கதைகளில்கூட ராஜக்கிருகத்தை வனப்பிரதேசமாகச் சொல்லப்படுகிறது. நந்தர்கள், மௌரியர்கள் ஆகிய இவ்விருவர்களின் அன்புற்ற அரசாட்சியில் பாடலீபுத்ர நகரம் செழித்து,

நீர்வளம், நிலவளம், குடிவளம் பெற்று உன்னத ஸ்திதியை யடைந்தது.

சாணக்யருடைய பிரசித்தமான அர்த்த சாஸ்திரத்தில் நகரத்தின் முக்கிய லக்ஷணமாவது, நெடுக்கில் வரிசையாய் மூன்று ராஜவீதிகளும், குறுக்கில் அதேவிதமாய் மூன்று ராஜ வீதிகளும், பன்னிரண்டு பிரதான வாசற்படிகளும் ஏற்பட்டிருக்கவேண்டுமென் றெடுத்துரைக்கப்பட் டிருக்கிறது. சந்திரகுப்தர் ராஜ சபையில் விளங்கின மகாஸ்தெனிஸ் என்ற பெருமான் பாடலீபுத்ரத்தைக்குறித்துப் பிரஸ்தாபிக்கும்போது அதில் 60 வாசற்படிகளும் 350 கோபுரங்களும் அடங்கியிருந்ததென்று கூறுகிறார். நகரத்தின் மதிள்கள் அநேக குதிரைவீரர்கள் சமவரிசையாய்க் குதிரைமேல் சவாரி செய்துகொண்டு போகத்தக்க அவ்வளவு விசாலமா யுள்ளவைகளா யிருந்தனவென்றும் சொல்லுகிறார். ஒரு கோபுரத்துக்கும் மற்றொரு கோபுரத்துக்கும் மத்தியில் 75 அடி அகலம் இடைவெளிப் பிரதேசம் காணப்பட்டதாம். கௌடில்யர் மேலே சொன்ன மெகாஸ்தெனிஸ் என்ற இரண்டு லோகப் பிரதர்கள் பாடலீபுத்ரத்தின் மேடைகள், மாளிகைகள், உத்யான வனங்கள், நாடகசாலைகள், ராஜசபைகள் முதலான இன்னுமநேகக் காட்சிகளைக்குறித்து வருணித்திருப்பதை மறுபடி எடுத்துரைப்பது வீணாகும். ஆனால் அவ்வுத்தம நகரம் மௌரிய மண்டலத்துக்கு ராஜாங்க ஸ்தானமாகயிருக்கத் தவறினதுமுதல் நாளது வரையில் அதிலுண்டான மாறுதல்கள், சீர்திருத்தங்கள், ஏற்பாடுகள் முதலான முக்கிய விஷயங்களைப்பற்றி விசாரிப்பது உசிதமே.

அசோகவர்த்தன மகாராஜா, ஜீவபலிகொடுத்துநடத்தப்பட்ட யக்ஞங்களைத்தம்இராஜ்யத்தில் நடத்தக்கூடாதென்று முழுதும் தடுத்துவிட்டார். அதனால் அந்த ராஜ்யத்திலும்அதற்கு வெளியிலுமுள்ள பிராமணர்க ளெல்லோரும் ஒன்றுகூடி, தங்கள் அதிகாரத்துக்குக் குறைவு நேரிட்டதைக்கண்டு கோபங்கொண்டு, அந்த இராஜவம்சத்துக்கு வேர்ப்பூச்சியாகி, அதைக் கருகச்செய்து அழிக்கத் தங்களாலியன்றவரை முயற்சிசெய்தனர். அசோக மகாராஜா இறந்த 50 வருடத்திற்குள் தாங்கள் கோரியபடியே அந்த இராஜ்யத்தைக் கைக்கொண்டு, எந்த அசோகர் அவர்கள் செய்வித்த யக்ஞங்களைத் தடுத்தாரோ, அந்த மகாராஜாவின் மாளிகையில் ஓர் அசுவமேதயாகம் கோலாகலத்துடன் நடத்தினார்கள். இதனையெல்லாம் முன்னின்று நடத்தினவர்கள் ஸங்க கோத்திரத்தவரான ஸாமவேதியப் பிராமணர்களே. இவர்கள் ஸாமவேத வகுப்பில் ஒன்றுக்குத் தலைமைபெற்ற ஆசாரியர்கள். இவர்கள் புத்தியிலும் சிறந்தவராயிருந்து மேற்கூறிய காரியங்களைச்சாதித்துவைப்பதில்முன்னின்று உழைத்துப் பின்பு கீர்த்தியடைந்தவர் புஷ்யமித்ரர் என்பவர். மௌரியர்களுடைய பெயர் பாடலீபுத்ரத்தில் இதற்குப் பிறகும் சிலகாலம் வழங்கிவந்ததேயெனினும், அப்புராதன நகரத்தின் ஆளுகை முழுமையும் மாளவதேசத்தில் விதிசமென்ற நகரத்திலிருந்து ஆண்டுவந்த ஸங்கர்களுக்கு உட்பட்டதாயிருந்தது. ஸங்கர்கள் அடிசறுக்கித் தாழ்வடைந்த காலத்தில், அவர்களுடைய மந்திரிகளான கண்வாயர்கள் அந்த இராஜ்யத்தில் ரோஹில் கண்டில் மிகுந்து நின்ற ஒரு பாகத்தை ஆண்டுவந்து, முக்கியமாய்ப் பாடலீபுத்ரத்தில் பூரணதிகாரம் செலுத்திவந்தார்கள். இப் பாடலீபுத்ர நகரம் கல்விக்கே இருப்பிடமாயும், வியாபாரங்களுக்கெல்லாம் தாய்வீட்டை யொத்த பெரும்சந்தையாயுமிருந்ததுமன்றி,இந்நகரத்திலிருந்தே நம்நாடு முழுதும் வழங்கி வருகிற சட்டதிட்டங்கள், பற்பல ஆசாரங்கள், மதக் கோட்பாடுகள், நியாயங்கள் முதலியன உண்டாகிப் பரவினவென்று ஏற்படுகிறது. நம் நாடெங்கும் நகரமென்றால் இதற்கே ஏற்றுப் பொருந்தின பெயர் என்று எண்ணப்பட்டு வந்தது. பௌத்த தர்மவித்தைக்கும் பௌத்தாசாரங்களுக்கும் இதுவே முக்கியமான இருப்பிடம். அதேமாதிரி ஜைன வித்தைக்கும், ஜைனாசாரங்களுக்கும் இதுவேதான் முக்கியமான இருப்பிடமா யிருந்தது. இந்த நகரத்திலிருந்தே பத்ரபாஹு என்ற ஜைனப் பிரசித்தர் அநேக ஜைன சந்நியாசிகளை அழைத்துச் சென்று மைசூரில் அமர்த்தினார். பௌத்தஸங்கம் ஒன்றுகூடி, உத்தர பௌத்தர்கள், தக்ஷிண பௌத்தர்கள் என்ற இரண்டு கக்ஷிகளாகத் தீர்மானித்துப் பிரிந்தவிடம் பாடலீபுத்ர நகரமே. பௌத்த தர்மத்தைப் பரவச் செய்யவேண்டுமென்று பௌத்த சந்நியாசிகள் உலகெங்கும் அனுப்பப்பட்டது இவ்விடத்திலிருந்தே.

## ஐக்கியப் பண்டகசாலையும் ஆரம்ப ஆசிரியர்களும்

## CO-OPERATIVE STORES & ELEMENTARY TEACHERS

நாகரிகம் முற்றுப்பெற்ற இக்காலத்துங் கூட ஒற்றுமையின் பெருமையை விளக்கிக் காட்டல் அவசியமா யிருக்கிறது. 'எத்தால் வாழலாம், ஒத்தால் வாழலாம்' என்ற பழமொழியை விளக்க ஒரு டிபார்ட்மெண்ட் ஏற்பட்டு நடைபெற்றுவருகிறது. 'இருவராய்ப் பூண்டீர்ப்பினல்லால் இல்வாழ்க்கை என்னும் இயல்புடைய வான் சகடம் செல்லாது' என்பதை நன்கறிந்த மாக்டர் ஒவ்வொருவரும் ஒற்றுமையின் குணத்தை அறிந்தவர்களேயாம். பலர்சேர்ந்து ஒரே மனத்தோடு எவ்விதக் காரியத்தைச் செய்யினும், ஜயமடைவதற்கு யாதும் தடையிராது?

இத்தகைய ஒற்றுமையைச் சிறுவர்கட்குத் தகுந்த வயதிலேயே ஊட்டின் நாடு விருத்தியடைவது திண்ணம். அதை இளம் பருவத்தில் கற்பிக்கத் தகுந்தவர் ஆசானும் பெற்றோர்களுமேதாம். ஆசானுடைய திறமையைப் பற்றிக் கவனிப்போம்.

பிரதம பாடசாலைகளில் அமர்ந்துள்ள உபாத்தியாயர்கட்குள் அதிகமான ஒற்றுமை யிருப்பதாக எண்ண இடமில்லை. அவ்வாறிருக்க, அவர்கள் பிறருக்கு இவ்விஷயத்தை எவ்வாறு போதிக்கமுடியும்? தங்கட்குள் ஒற்றுமையின்மையால் தொழிலுக்கு மகிமை குன்றிவிட்டதெனக் கருதித் தற்காலம் மகாநாடுகள் சபைகள் கூடி விஷயங்களைத் தீர்மானிக்கிறார்கள். ஆயினும், அனுபவத்தில் சரியான ஒற்றுமை இருப்பதாக எண்ண இடமில்லை.

உபாத்தியாயர்களின் ஊதியமோ சொற்பம். அது போதாதென்று மன்றாடிச் சம்பளத்தை உயர்த்தவே மகாநாடுகள் கூடுகிறார்கள். இம் மகாநாடுகளும் சபைகளும் நடந்தேறச்செய்யவும், அங்கு தீர்மானித்த விஷயங்களை அமுலுக்குக் கொண்டுவரவும் திரவியம் ஏராளமாக வேண்டியிருக்கிறது. இதைத் திரட்ட அவர்கள் படும்பாடு மெச்சத்தக்கதாயினும், ஒருவாறு பரிதபிக்கத் தக்கதாகவே இருக்கிறது. இவைகளை ஆராயுமிடத்து சந்தா கொடுப்பதுகூட அவர்கட்கு ஒரு, பாரமாகத் தோன்றுகிறது. என்றாலும், சபைகளினால் தங்கட்கு இனிக் கிடைக்குமென்று எதிர்பார்க்கும் நன்மையையுன்னிச் சந்தா செலுத்துகிறார்கள். இவ்விதத் தொந்தரவு ஒன்றுமில்லாமல் பொதுப் பிரயோசனத்துக்கு ஏராளமான தனம் சேகரிக்கும் உபாயம் ஒன்றுண்டு. அஃது ஒற்றுமையையன்றி வேறல்ல.

ஒவ்வொரு ஜில்லாவிலும் பிரதம பாடசாலைகள் ஆயிரக்கணக்காக ஏற்பட்டு நடைபெறுவதையும், கல்வி இலாகாவில் ஒவ்வொரு ஜில்லாவையும் சில பிரிவுகளாகப் பிரித்திருப்பதையும் நாம் காண்கிறோம். சாதாரணமாக, உபாத்தியாயர் ஒருவருக்கு 25 பிள்ளைகள்வீதம் இரண்டு உபாத்தியாயருக்குமேல் ஒவ்வொரு பாடசாலையிலு மிருப்பார்கள். இவ்வாறு ஒரு பிரிவில் 160 பாடசாலைகள்வரை இருக்கலாம். ஆகவே, ஒரு பிரிவில் 300 முதல் 400 உபாத்தியாயர்களும் 10,000 பிள்ளைகளு மிருப்பார்கள். இவர்கட்குக் கல்வி கற்பதற்கு வேண்டிய புத்தகம் முதலிய வஸ்துக்கள் எவ்விதம் சேகரிக்கப்படுகிறதென்று கவனிப்போம்.

(1) பிள்ளைகளின்பெற்றோர்கள் சந்தைக்குச் சென்று அங்கு கிடைக்கும் வஸ்துக்களை வாங்கி வருகிறார்கள். தேவையான வஸ்து கிடைப்பதில்லை; விலையும் அதிகமாகக் கொடுத்து விடுகிறார்கள். (2) சில இடங்களில் உபாத்தியாயர்கள் பெரிய பட்டணங்கட்குச் சென்று பலவிதங்களில் திரவியத்தைச் செலவிட்டுப் புத்தகங்களைவாங்கிவந்து அதிக விலைக்குப் பிள்ளைகளிடம் விற்கிறார்கள். (3) மற்றும் சிலர் கம்பெனிகளின் விலாசம் அறிந்துகொண்டு நேராக ஆர்டர் கொடுத்து வி. பி. மூலமாக வரவழைத்துக் கொள்ளுகிறார்கள். மேலே காட்டிய எந்த முறையினும் விலையானது கம்பெனியில் பிரசுரித்த விலைக்கு $1\frac{1}{2}$ மடங்குக்கு மேல் ஆகிவிடுவதோடு வஸ்துக்கள் குறித்த காலத்தில் கிடைப்பதில்லை. வேண்டிய வஸ்துக்களும் அகப்படுவதில்லை. யாவருக்கும் கஷ்டமும், நஷ்டமுமே ஏற்படுகின்றன.

அவ்வாறின்றி உபாத்தியாயர்கள் யாவரும் ஒரு மனத்தோடு பாடசாலைக் கவசிய வஸ்துக்கள் சுலபமாய்க் கிடைப்பதற்கு ஐக்கியப் பண்டகசாலை ஒன்று ஏற்படுத்தி நடத்தினால், அதனால் அவர்கள் அடையும் பலன் அளவிடமுடி

யாததாகும். அங்கே பாடசாலைக்கு வேண்டிய உபகரணங்களை விற்பதாக வைத்துக் கொள்ளலாம். இதை எவ்வாறு நடத்தலாமென்பதைச் சற்று ஆராய்ந்து பார்ப்போம்.

ஒவ்வொரு பிரிவிலும், மாதாமாதம் கூடும் சில உபாத்திமைச் சங்கங்கள் இருக்கின்றன. அவைகள் சிற்சில விதிகளுக்குக் கட்டுப்பட்டு நடைபெறுகின்றன. அச் சபைகளின்கண் ஆலோசிக்கப்படும் விஷயங்களைப்பற்றி இங்கு விவரிக்காவிடினும், எல்லா உபாத்தியாயர்களும் ஆஜராகி வருவதையே முக்கியக் கருத்தாகக்கொண்டு எடுத்த காரியத்தை நிறைவேற்றலாம். ஒவ்வொரு உபாத்தியாயரும் மூன்று ரூபாய் மதிப்புள்ள ஒரு பங்கு எடுத்துக்கொண்டால், 400 உபாத்தியாயர்கள் அடங்கிய ஒரு பிரிவில் ஸ்தாபிக்கப்படும் பண்டகசாலைக்கு 1,200 ரூபாய் மூலதனம் ஏற்படும். மாதாமாதம் 1,000 ரூபாய்வரை வியாபாரம் நடைபெறுவதாக எண்ணினால், வருஷத்தில் 12,000-க்கு மேல் தேவையிராது. ஆதலால், 1,200 ரூபாய் மூலதனத்தைக் கொண்டே பண்டகசாலையை நடத்திவர முடியும். இது போதாமற்போனால், ஜில்லா ஐக்கியச் சங்கங்களிலிருந்து கடன் வாங்கிக்கொள்ளலாம்.

மாணாக்கன் ஒருவனுக்கு ஒரு ரூபாய் வீதம் வருஷத்தில் உபகரணங்கட்காகச்செலவுசெய்யப்படுவதாகவும், உபாத்தியாயர் ஒருவருக்கு 25 ரூபாய் வீதம் வியாபாரம் ஆவதாகவும் வைத்துக் கொண்டாலும், 10,000 ரூபாய் வியாபாரமே நடைபெறும். தவிரவும், பிரதம பாடசாலைகளில் வருஷாந்தரப் பரீக்ஷை நடந்தபிறகுதான் வகுப்பு மாற்றுவது வழக்கமாதலால், ஒரே மாதத்தில் யாவரும் ஒரு மிக்க வஸ்துக்களை வாங்கமாட்டார்கள்.

இவ்வாறு ஸ்தாபிக்கும்பண்டகசாலையானது போக்குவரத்துக்குச் சாதகமான ஒரு இடத்தில் ஒவ்வொரு பிரிவுக்கு ஒன்றாக அமைக்கப்படுவதாக வைத்துக்கொள்வோம். பிரதி மாதமும் சங்கம் கூடும்பொழுது, ஒவ்வொரு உபாத்தியாயரும் தமக்கும் தமது மாணாக்கர்களுக்கும் அடுத்த ஒரு மாதத்திற்குள் தேவையான உபகரணங்களுக்குப் பட்டியல் ஒன்று தயாரித்து வந்து சங்கக்காரியதரிசியினிடம் கொடுக்கவேண்டும். அவர் தம்முடன் சேர்ந்த நிர்வாகசபையாரில் இருவருடன் கலந்து, கிடைத்த பட்டியல்களைச் சரிவர ஒழுங்குபடுத்திப் பண்டகசாலைக் காரியதரிசிக்கு அனுப்ப வேண்டும். அவரும் அதேமாதிரி ஒவ்வொரு கம்பெனியிலிருந்தும் தருவிக்கவேண்டியவைகளைப் பிரித்து ஒழுங்குபடுத்தி, சாமான்களை மொத்தமாக வரவழைப்பார். சாமான்கள்வந்தவுடன் அந்தந்தப்பட்டியல்படி பிரித்துச் சங்கங்களுக்கு அனுப்பிவிடலாம். அல்லது, ரயில்வே, தபால் வசதிகள் இருக்குமிடங்கட்கு நேராக அனுப்பும்படி கம்பெனிகளையே கேட்டுக்கொள்ளலாம். மறுமாதம் சங்கங்கூடும் நாள் அங்கத்தினர்கள் அடுத்த மாதத்துக்கு வேண்டிய சாமான்களுக்குப் பட்டியல் கொடுத்துவிட்டு முன் மாதத்தில் வாங்கிய உபகரணங்களின் விலையைச் செலுத்தலாம்.

இத்தகைய காரியத்தால் அடையும் பலன்கள் யாவை?

(1) குறித்தகாலத்தில் பாடசாலைக்கு வேண்டிய சாமான்கள் கிடைக்கும்.

(2) சங்கத்தின் நன்மை அதிகப்படுவதோடு உபகரணங்கள் வாங்குவதற்காகச் செலவு செய்து அயல் ஊர்களுக்குச் செல்லவேண்டுவதில்லை. சங்கத்துக்கு ஒழுங்காகப் போய்ச் சேர்வதே போதுமானது.

(3) உபாத்தியாயர்களுக்குள் ஒற்றுமை அதிகப்படும்.

(4) ஒரேவகுப்பில் உள்ள பையன்களிடம் ஒவ்வொரு பாடத்திற்கும் ஒரேவித புத்தகம் இருக்கும். எல்லோரிடமும் தவறாமல் உபகரணங்கள் யாவும் இருக்கும்.

(5) அங்கத்தினர்கள் சங்கத்துக்குச் சந்தா கொடுக்கவேண்டிய தேவையிராது.

(6) புத்தகம், கற்பலகை, பேனா முதலிய சாமான்களின் விலை சரசமாவதோடு, நேர்த்தியான பொருள்களும் கிடைக்கும்.

(7) இத்துடன் அங்கத்தினர்களுக்கு ஒருவித லாபமும் ஏற்படுகிறது. இது பண்டகசாலையின் முக்கிய நோக்கமில்லையே பெனினும், அதுவும் அதனாலடையும் நன்மைகளில் ஒன்றாகிறது. அதன் விவரம் பின்வருமாறு:—

வியாபாரம் செய்யும் கம்பெனிகளில் 100-க்கு 10 முதல் 20 வரை விந்தாசு (கமிஷன்) கொடுக்கிறார்கள். அதிலும் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் இப்பாஷைகளில் பிரசுரிக்கப்படும் புத்தகங்களை விற்போர் 100-க்கு

25-வரையிலும் கொடுப்பதைப் பார்க்கிறோம். நாம் 100-க்கு 15 கிடைப்பதாகவே எண்ணிக் கணக்கிடுவோம். 12,000 ரூபாய் வியாபாரத்தில் 1800 ரூபாய் வரை கமிஷன் உண்டு. இதற்குஏற்படும் செலவும் கீழே காட்டப்பட்டிருக்கிறது. ஏறக்குறைய 900 ரூபாய்வரை செலவானபின் மீதி 900 ரூபாயை அங்கத்தினர்கள் தங்கள் மூலதனத்தின் வட்டிக்கும், சங்கத்தின் சந்தாவுக்கும், வியாபாரத்தின் லாபத்துக்கும் பங்கிடலாம். கொஞ்சகாலம் சரிவர நடந்தேறினால், கம்பெனிகள் இப்பாடசாலைகளையே தங்களுடைய ஏஜண்டுகளாகச் செய்துகொண்டு தங்கள் சாமான்களை அங்கேயே வைத்துவிடுவார்கள். அதனால் தபாற்செலவு கூடக் குறைந்துவிடும். தவிரவும், இனமாக இவர்களுக்குக் கிடைக்கும் புத்தகங்களைச் சேர்த்துவைத்தால் ஒருபுத்தகசாலைஸ்தாபிக்கலாம்.

ஆகையால், 'பல துளி பெரு வெள்ளம்' என்ற பழமொழியைத் தீர்க்கமாக ஆலோசித்து ஒவ்வொருவரும் ஒருரூபாய்வீதம் செலவிட்டபோதிலும், யாவரும் கூடியதால் பலன் கிடைப்பதை எண்ணி, இனியாகிலும் சும்மாயிராமல் இவ்விதப் பண்டகசாலை ஏற்படுத்துவார்களென்று எண்ணுகிறோம். இதனால் ஏற்படும் நன்மை அனுபவத்தில்தான் நன்கு விளங்குமாகையால் அதை இங்கு வித்தாரமாக எடுத்துச் சொல்லப்படவில்லை.

கமிஷன் 1,800 ரூபாய்க்கு
வரவு செலவு கணக்கு

| வரவு | ரூ. | அ. |
|---|---|---|
| வியாபாரம் 12,000 ரூபாய் 100-க்கு 15-வீதம் கூடிய கமிஷன் ... | 1,800 | 0 |
| மொத்தம் ... | 1,800 | 0 |

| செலவு | ரூ. | அ. |
|---|---|---|
| 1. தபாற் செலவு ... ... | 600 | 0 |
| 2. வீட்டு வாடகையும், சேவகன், குமாஸ்தா சம்பளமும் ... | 225 | 0 |
| 3. சங்கங்கள் கூடும் செலவு ... | 75 | 0 |
| 4. 1,200-க்கு வட்டி 100-க்கு 8-வீதம் ... ... | 96 | 0 |
| 5. 12,000 ரூபாய் வியாபாரத்தில் 100-க்கு 6¼-வீதம் லாபம் ... | 750 | 0 |
| 6. க்ஷேம நிதி ... ... | 54 | 0 |
| மொத்தம் ... | 1,800 | 0 |

## இந்தியாவில் காகிதம் செய்யும் முறையின் சரித்திரம்*

## HISTORY OF PAPER-MAKING IN INDIA

ஐரோப்பிய மகாயுத்தத்தினால் உலகத்தில் காகிதப் பஞ்சம் ஏற்பட்டு, ஒவ்வொரு தேசத்தவரும் தமது தேசத்தில் செய்யப்படும் காகிதத்தின் அளவை அதிகரிக்கச்செய்யப் பலவழிகளிலும் முயன்றுவருகிறார்களாதலால், இந்தியாவும் இவ்விஷயத்தில் ஊக்கத்துடன் உழைத்துத் தனது காகிதப்பஞ்சத்தை நீக்கிக்கொள்ள வேண்டும்.

காகிதம் செய்வதற்கு அவசியமான சரக்குகள் இந்தியாவில் ஏராளமாய்க் கிடைக்கின்றன. காகிதம் செய்யும் வித்தையும் நமது தேசத்துக்குப் புதிதல்ல. அவ்வித்தை நமது தேசத்தவருக்குச் சுமார் 2,400 வருஷங்களுக்கு முன்னமே தெரியுமென்பதற்குத் தகுந்த சாக்ஷியங்களிருக்கின்றன. இங்கிலாந்தில் செய்யப்படும் காகிதத்துக்குவேண்டிய மரக்கூழானது பெரும்பான்மையும் நார்வே, ஸ்வீடன் என்னும் இருதேசங்களிலிருந்துமே வந்தாகவேண்டியிருப்பதாகவும், அதன் தற்காலவிலை மகாயுத்தத்துக்குமுன் இருந்த விலையைப் போல் மூன்றுமடங்காக ஆகிவிட்டதாகவும், ஆகையினால் இங்கிலாந்து தன்னைச் சேர்ந்த கானடா முதலிய தேசங்களிலுள்ள காடுகளைப் பரீக்ஷித்து அவைகளிலிருந்து தனக்குக் காகிதம்செய்வதற் கவசியமான சரக்குகளைச் சம்பாதித்துக்கொள்ள வேண்டுமென்றும் இங்கிலாந்தில் பிரசுரம்செய்யப்படும் ஓர் பத்திரிகையில் கூறப்பட்டிருக்கிறது.

காகிதம் செய்யப்படுமுன் அதற்குப்பதிலாக பலவஸ்துக்கள் இந்தியாவிலும் உலகத்திலுள்ள மற்ற நாடுகளிலும் உபயோகிக்கப்பட்டு வந்ததாகத் தெரியவருகிறது. இந்தியாவில் மௌரியவம்சத்துச் சக்கரவர்த்தியின் கட்டளைகள் கற்றூண்களில் வெட்டி வரையப்பட்டன; அநேக அரசர்களது உத்தரவுகளும், இராஜவம்சாவளிகளும், போர்ச் சரித்திரங்களும்,

*[சாஸ்திர அபிவிருத்தி இந்திய சங்கத்தார் முன் இரசாயனசாரியர் ஸ்ரீமான் சுனிலால் போஸ், ஐ. எஸ். ஓ., எம். பி., எப். வி. எஸ்., செய்த பிரசங்கத்தின் சாரம் இங்கு எடுத்துக் கூறப்பட்டிருக்கிறது.]

பூனை உள்ள இடத்திலே, எலி பேரன் பேர்த்தி எடுக்கிறது.

தான சாசனங்களும் கனத்த தாம்பிரத் தகடுகளில் வெட்டி எழுதப்பட்டிருக்கின்றன; மத சம்பந்தமான விஷயங்களும் மந்திரங்களும் பூர்ஜபத்திரம் என்னும் மரவுரியில் எழுதப்பட்டிருக்கின்றன; பனையோலைகளில் எழுத்தாணிகளால் எழுதும் வழக்கம் இப்போதும் வழங்கி வருவதைக் காண்கிறோம். இவ்வாறு இந்தியாவில் காகிதத்துக்குப் பதிலாகப் பல வஸ்துக்கள் உபயோகிக்கப்பட்டு வந்தனவே யெனினும், காகிதம் செய்யும் முறையும் நமது தேசத்தவருக்கு கிறிஸ்து பிறப்பதற்கு முந்நூறு வருஷங்களுக்கு முன்னமே தெரியுமென்பது, அக்காலத்தில் வடக்கேயுள்ள பஞ்சாப் என்னும் மாகாணத்தில், அடிக்காத பருத்திப் பஞ்சை இரண்டு மூன்று வரிசை ஒன்றன்மே லொன்றாக வைத்து அவைகளையழுத்தி ஒன்றுபட்டுச் சேரச் செய்து அவ்வாறு செய்யப்பட்ட மிருதுவான மெல்லிய காகிதத்துக்குப் பளபளப்பு உண்டாக்கிப் பிறகு அதை எழுதுவதற்கு உபயோகித்ததைத் தாம் தம் கண்ணாற் கண்டதாக கி. மு. 327-ம் ஆண்டில் இந்தியாவின்மீது படையெடுத்துவந்த மகா அலெக்ஜாண்டர் என்னும் அரசனது சேனாதிபதி நியார்க்கஸ் என்பவர் எழுதியிருப்பதாக பாபு நாகேந்திர நாத் பாஸு ப்ராச்யவித்யா மகார்ணவம் என்னும் பண்டித சிகாமணி தமது பேர்பெற்ற விசுவகோசம் என்னும் நூலில் எழுதியிருப்பதிலிருந்து தெரியவருகிறது.

இந்தியாவில் அடிக்காத பருத்திப் பஞ்சு நாரைக்கொண்டு கையினாற் செய்யப்பட்ட காகிதத்துக்கு துலாத் என்று பெயர் வழங்கி வந்தது. ஒருகாலத்தில் நமது தேசத்தில மத சம்பந்தமான புத்தகங்கள், தஸ்தவேஜுகள், கணக்குகள் முதலியவை அக்காகிதத்திலதான் எழுதப்பட்டுவந்தன. அந்தத் துலாத் காகிதம் வெள்ளை, மஞ்சள் என இருவகைப்பட்டது. அதில் மஞ்சள் காகிதந்தான் உயர்ந்ததாகக் கருதப்பட்டுவந்தது. கடைசிகாலாந்தரத்தில் அப்படிப்பட்ட காகிதம் வங்காளத்திலுள்ள மால்டா என்னும் பட்டணத்தில் காகிதம்செய்வதையேதொழிலாகவுடைய கக்ஜி யென்னும் தனிவகுப்பைச் சேர்ந்த மகமதியரால் விசேஷமாய்ச் செய்யப்பட்டு வந்தது. அவர்கள் கிழிந்த காகிதத் துணுக்குகளையும் பழைய துணிக்கந்தல்களையும் சுத்தஞ்செய்யாத சஜ்ஜி மட்டி, சுண்ணம்பு இவைகள் கலந்த நீரிலிட்டு வேகவைத்துக் கூழாகச்செய்து, அக்கூழுடன் அரிசிமாவை நன்றாய்க் கலந்து, அப்படிக் கலந்ததனா லுண்டான பதார்த்தத்தை அடியில் துளைகளையுடைய மரஅச்சுப்பலகைகளின்மீது இலேசாய்ப் பரப்பி, வெயிலில் வைத்து உலர்த்திக் காகிதம் செய்துவந்தார்கள். ஒருகாலத்தில் இந்தியாவின் மற்றப்பாகங்களுக்கும் இந்தியாவுக்கு வெளியேயுள்ள பிற தேசங்களுக்கும் காகிதம் அனுப்பப்பட்டுவரும்படி அவ்வளவு நல்ல ஸ்திதியில் இருந்தது அக்கைத்தொழில். காகிதம் அழுத்தமானதாயும், நீடித்திருக்கக் கூடியதாயும், எழுதப்பெற்றால் ஊறாததாயும் இருந்தது.

மால்டாவிற் செய்துவந்த அளவுக்குக் கொஞ்சம் குறைவாக ஹூக்ளியைச்சார்ந்த மைமான் என்னும்ஊரிலும், டக்கா, ஷாகாபாத், முஜப்பர்ப்பூர், அவுரங்கபாத், டௌலதாபாத், ஆமதாபாத், தார்வார், கோலாப்பூர் என்னும் ஊர்களிலும் காகிதம் செய்யப்பட்டுவந்தது. அவ்விடங்களிற் செய்யப்பட்டு வந்த காகிதங்க ளெல்லாவற்றிலும் அவுரங்கபாத் என்னும ஊரிற்செய்துவந்த காகிதமே மிகவும் உயர்ந்த காகிதமென மதிக்கப்பட்டு வந்தது. டௌலதாபாத் என்னும் ஊரில் காகிதக்கூழில் மெலலிய தங்கத்தகடுகளைப் போட்டுக் கலந்து காகிதம் செய்துவந்தார்கள். அச்சிங்காரமான காகிதத்தின் பெயர் அப்ஸானி. அக்காகிதத்தை நமது இந்திய மன்னவர்கள் ஆவலுடன் வாங்கிக்கொண்டார்கள்.

கி. பி. 1840-ம் ஆண்டுக்குமுன் இந்தியாவுக்கு வேண்டிய காகிதம்பெரும்பாலும் சீனத்திலிருந்து வரவழைக்கப்பட்டு வந்தது. அவ்வருஷம்முதல் அக்கைத்தொழில் இந்தியாவில செழிக்கத்தொடங்கி, நாடெங்கும் அந்தக் கைத்தொழிற் சாலைகள் ஏற்படுத்தப்பட்டன.

இங்கிலாந்தில் காகிதம் செய்யத் தொடங்கி நானூறு வருஷங்கள்தாம் ஆகின்றன. கி. பி. 1770-ம் வருஷத்திலதான அத்தேசத்தில் எழுதுவதறகு யோக்கியமான காகிதம் சீராததியானதாயும மெல்லியதாயும் செய்யப்பட்டது.

கி. பி. 1798-ம் வருஷம் வரையில உலகமெங்கும் காகிதம் கையினாலேயே செய்துவரப்பட்டது. அவவருஷத்திலதான் பாரிஸ் நகரத்

துக்குச் சமீபத்திலிருந்த காகிதக் கைத்தொழிற் சாலையில் வேலையாயிருந்த லூவி ராபர்ட் என்பவர் காகிதம் செய்வதற்கு ஒரு இயந்திரம் முதன்முதலில் உண்டாக்கினார்.

காகிதமானது செடிகொடிமரங்களிலிருந்து கிடைக்கும் நாரினால் செய்யப்படுகிறது. அந்நாரானது மற்றப் பதார்த்தங்களி லிருந்து பிரித்து சுத்தஞ்செய்யப்பட்டபின், இரசாயன முறைகளினாலும் இடித்தல் முதலிய வழிகளினாலும் கூழாகச் செய்யப்படுகிறது. பிறகு அக்கூழானது வெளுக்கப்பட்டு நீரில் மிதக்கவிடப்படுகிறது. அது மிதந்து சென்று கம்பிகளாற்செய்த காகித அச்சில்தங்குகிறது. பிறகு நீர் வடியவிடப்படுகிறது. காகிதக்கூழ் மிதந்து வந்து அவ்வச்சில் தங்குவதனால், நுண்ணிய நார்கள் ஒன்றன்மீதொன்று படிந்து காகிதத் தாள்கள் உண்டாகின்றன. பிறகு அத்தாள்கள் பலமாய் அழுத்தப்பட்டு, உலர்த்தப்பட்டு, பளபளப்புடையவைகளாக ஆக்கப்பட்டு, அளவுக்குச் சரியாய்க் கத்தரிக்கப்படுகின்றன.

பழைய துணிக்கந்தல்களி லிருந்து கலப்பில்லாத காகிதக்கூழ் எளிதிற் கிடைக்கிறது. மற்றும் நமதுதேசத்தில் காகிதம் செய்வதற்கு வேண்டிய கூழை ஏராளமாய்த் தரத்தக்க வஸ்துக்களிற் சில பருத்திப்பஞ்சு, சணல் நார், வைக்கோல், கோதுமை, சோளம் இவைகளின் தட்டை, வாழைநார், கருப்பஞ்சக்கை, தேங்காய்நார், புளிச்சிக்கீரைநார், மூங்கில் இவைகளே. மூங்கிலின் இளங்கொம்புகள்தாம் காகிதம் செய்வதற்கு உபயோகமாக விருக்கின்றனவாகையால், இளங்கொம்புகளை யொடித்தாலும் மூங்கில்தூர் அழியாம லிருப்பதற்கு வழிதேட வேண்டும். மேற்கூறிய வஸ்துக்களைத் தவிர நமது நாட்டில் இன்னும் அநேக புற்கள், செடிகொடிகள் காகிதம் செய்வதற் கவசியமான நாரைத் தருகின்றன.

காகிதம் செய்வதற்கவசியமான சரக்குகள் நமது தேசத்தில் ஏராளமாய்க் கிடைப்பதனாலும், மட்டக் காகிதங்கள் செய்வதற்கு அவசியமான இயந்திரங்களை நமது தேசத்திலேயே சொற்பச் செலவில் செய்துகொள்ளக்கூடுமாதலாலும், வேலையாட்களுக்கு எவ்வளவு அதிகமாகக் கூலிகொடுத்தாலும் நமது நாட்டிற் கொடுக்கும்கூலி மற்றநாடுகளிற் கொடுக்கப்படுவதிலும் மிகவும் குறைந்ததே யாகையினாலும் தனவந்தர்களும் இரசாயன சாஸ்திர பண்டிதர்களும் ஒன்றுசேர்ந்து நமது தேசத்தில் இயந்திரங்களி னுதவியினால் காகிதம் செய்வதற்காகப் பல பெரிய தொழிற்சாலைகளை ஏற்படுத்தி ஏராளமாய்க் காகிதம்செய்து நமது நாட்டிலேயே சுலபவிலைக்கு நயமான காகிதம் கிடைக்கும்படிசெய்து, பிறநாடுகளிலிருந்துநாம் காகிதம் வாங்கவேண்டிய அவசியத்தையொழித்து அந்நாடுகளுக்கு நமதுதேசத்தில் சொற்பச் செலவில் செய்யும் காகிதத்தை யனுப்பி விற்று நமது நாட்டின் செல்வத்தைப் பெருக்கி, நம் நாட்டிலுள்ளோரை இப்போது வருத்தும் காகிதப் பஞ்சத்தையும் பொருட் பஞ்சத்தையும் ஒருங்கேஒழிக்கவேண்டுமென அவர்களுடைய தேசபக்தியைப் பிரார்த்திக்கிறோம்.

---

## விக்ரமஸிங்கன் கோட்டை மர்மம்

இப்புதிய நாவல் பெயர்பெற்ற துப்பறியும் ஷண்முகசுந்தரத்தின் துப்புத் திறத்தை நன்கு விளக்கிக்காட்டுகிறது. ஆரம்பத்தில் எவரும் பிரவேசிப்பதற் கரிதான கருங்கற் கோட்டையில் காவற்காரன் எஜமானியைக் கொன்றதாகத் தெரிய வருகிறது. அச்சந்தர்ப்பத்தில் ஷண்முகசுந்தரம் அழைக்கப்பட்டு, அந்த அம்மாள் இறக்கவில்லையென்று அறிந்து அவளை உயிர்ப்பித்து, காவற்காரன் குற்றவாளியல்லவென நிரூபித்து, அப்பிராந்தத்தில் பேர்பெற்ற கொள்ளைக்காரனை சிங்கமாமுகனைத் தொடர்ந்து, அவன் தாசியை மயக்கி அவன திருப்பிடத்தையறிந்து, சந்நியாசிவேடம் பூண்டு சிங்கமாமுகனுக்குச் சிகிச்சைசெய்யச் சென்று, அப்போது தன் மந்திர சக்தியால தீரனான சிங்கமாமுகனை யடக்கி வீழ்த்தி அவனைக் கொல்ல முயன்ற துருக்க சந்நியாசி யொருவனை தன்னுடைய நிகரற்ற மந்திர சக்தியால அடக்கி, சிங்கமாமுகன்பூண்ட பலவேடங்களையும் துருக்கச் சந்நியாசியின் வேடத்தையும் எளிதில் நீக்கித்து, அந்த அம்மாளது கணவனான துருக்கச் சந்நியாசியையும் சகோதரனான சிங்கமாமுகனையும் சிநேகப்படுத்தி, கற்பின் அவதாரமான அந்த அம்மாளது கற்பைச் சந்தேகித்து ஆராயாது செய்த செய்கைகளில் யாவருமுற்ற துயரத்தை எடுத்துக் காட்டுகிறான். மிகவும் எளியநடையில் எழுதப்பட்டுளது. எடுத்தவர் படித்துமுடிக்காமல கீழேவைக்க முடியாது. நான்கு அழகிய சித்திரப்படங்கள் அடங்கியது. விலை ரூபாய் ஒன்றுதான். வேண்டுவோர் அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர் என்ற விலாசத்திற்கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

---

பூனைக்குக் கொண்டாட்டம் எலிக்குத் திண்டாட்டம்.

## பார்க்கவன்*

### அல்லது

### பரம ரஹஸ்யம்

### முதல் அத்தியாயம்

### நன்றியறியா மக்கள்

167-ஆம் ஆகஸ்ட்மீ 20வ ஸகேதபுரியின் பிரதான வீதிகளில் பிரஜைகள் மிக்க கோலாஹலத்துடன் ஆரவாரம் செய்துகொண்டு திரள்திரளாய்ப் புரண்டு செல்கிறார்கள்.

ஆ! என்ன வித்தியாஸம்! ஸாதாரணமாய் எவ்வளவு ரம்யமாயும், மனோஹரமாயும், அலங்காரமாயும் இருப்பது! உல்லாஸமான உத்யானவனங்களையும் அருகிலுள்ள அழகிய ஆற்று நீர்ப்பெருக்கையும், விசாலமான மாடமாளிகைகளையுங் கொண்டு நித்திய வைபவங்களுடன் விளங்கும் தேவேந்திரபுரி என்று சொல்லத் தகுந்ததல்லவா ஸகேதம்.

எப்பொழுதும் சாந்தசீலர்களாய், தங்கள் விருத்தியிலேயே கண்ணுங் கருத்துமாய் வருந்தி யுழைக்கும் இவ்வூர் வாசிகள் இன்றைய காலையில் மாத்திரம் அடக்கமுடியா ஆவேசத்துடன் இடையில் வாட்படைகளுடனும் கையில் ஈட்டி தோமரங்களுடனும் விரைந்து செல்வானேன்? இவர்கள் நோக்கிச் செல்லும் பூதனக்ருஹம் என்னும் சிறைச்சாலையில் என்ன நடக்கப்போகின்றது? ஓ! இம்மத்ய நாட்டின் ராஜதந்திர நிபுணரான தேவதத்தரின் ஸஹோதரர் காரணேசர் அல்லவா இங்கு ஓர் அபவாதத்திற்குள்ளாகி அடைபட்டுக் கிடக்கின்றார்!

சில ஆண்டுகளாய் இந்த மஹா நாடானது இவ்விரு ஸஹோதரரின் அதிகாரத்துக்குட்பட்டிருந்தது. ஆனால் ஸ்வல்பகாலத்திற்கு முன்னால் அயல்நாட்டு அரசனான வீரகேசரி படையெடுக்கவும் இந்நாட்டுப் பிரஜைகள் தங்கள் பாதுகாவலைக் கோரினவர்களாய் முன்னைய அரசாட்சியையே விரும்பினார்கள். அப்படியே ஓர் தலைவனையும் நியமித்தாய்விட்டது.

காரணேசர் தார்த்துாக நகரில் பிறந்தவர். அரசாங்கத்தில் மிகக கௌரவமான உத்யோகங்களை வஹித்தவர். சிறிதுகாலம் ஸைந்யத் தலைவராயும் இருந்தவர், தமது ஊர்ப் பாதுகாவல்பொறுப்பும் இவருக்கமைந்தது. இம்மாதிரி பலவிதத் துறைகளிலும் உழைத்துவரும் பொழுது ஜனங்களுக்கு மேற்கூறிய காரணத்தாலோ, வேறெந்த முகாந்திரத்தாலோ குடியரசின்மீது வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. காரணேசருக்கு அரசாங்கத்தில் அடிக்கடி மாறுதல்கள் கூடாதென்பது கொள்கை. ஆகவே, பிரஜைகளின் கோபத்திற்கும் பகைமைக்கும் இலக்காய்விட்டார்.

நாட்டின் தலைவராகத் தற்காலம் நியமிக்கப்பட்டவன் முத்கலன்; சாந்தசீலனாயும் அடங்கா வீரதீரம் பொருந்தியவன். வயது இருபத்திரண்டுதானிருக்கலாம். காரணேசரது ஸகோதரர் தேவதத்தரிடத்தில் ஸகல கலைகளையும் பயின்றவன். ராஜ்ய தந்திரத்தில் கை தேர்ந்தவன்.

நாட்டில் ஏற்கெனவே அரசாங்க முறைமையில் மாறுபாடுகள் ஏற்படுங் காலத்தில் தேவதத்தர் தம் நாட்டாரிஷ்டப்படியே நடக்கட்டுமென் றிருந்துவிட்டார். காரணேசரோ எத்தகைய மாறுபாட்டிற்கும் இடங்கொடாதவராய் தம் கொள்கைகளிலேயே உறுதிப்பாடுடையவரா யிருந்தார். ஆனால் இறுதியில் தம் மனைவி மன்றாடியதின் பிறகு மனத்தளர்ச்சியடைந்து நூதன அரசை அங்கீகரித்தார்.

தம் நாட்டாரது கோரிக்கையின் வண்ணம் காரணேசர் நடந்துகொண்டபோதிலும் பிரஜைகளின் பகைமை மட்டும் அவரைவிட்டு அகலவில்லை. சிலநாட்களுக்குள் அவரைக் குத்திக்கொலைசெய்ய சிலர் முயற்சி செய்தார்கள். ஆதலால் அவருக்குப் பலத்த காயங்கள் பட்டிருந்தன. அப்புதிய கட்சியைச் சேர்ந்தவர்கள் இன்னும் திருப்தி யடையவில்லை. இவ்விரு ஸஹோதரரும் நாட்டிலிருக்கும் வரையில் தங்கள் எண்ணங்கள் கைகூடா வென்பதையுணர்ந்து அவர்கள் ஆயுதங்களால் முடியாத கொடுந்தொழிலை கோட்சொல்லால் நிறைவேற்ற முயன்றார்கள்.

இத்தகைய கொடுந்தொழிலைச் செய்து முடிக்க நியமிக்கப்பட்டவன் தைகலிகன் என்னும் ரணவைத்தியன். நூதன அரசாங்கத் தலைவரை ஒழித்துவிடும்படி காரணேசர் கொலையாளி ஒருவனை ஏற்படுத்தியதாகவும், தானே அவர் ஏற்படுத்திய அக்கொலையாளி யென்றும்

* An adaptation of Alexandre Dumas' "The Black Tulip."

அத்தகைய கொடுஞ்செயலைப் புரிவதிலும் வெளியிட்டுவிடுவதே மேலானதென்று தான் கருதியதாகவும் அவன் எல்லோர் முன்னிலையிலும் வெளிவிட்டான்.

இவ்விஷயம் வெளியானதும், நூதன கட்சியிலுண்டான உக்கிரத்திற்குக் கரையேயில்லை. 167-௵ ஆகஸ்ட்௴ 16௳ காரணேசர் நியாயாதிபதியின் ஆக்ஞைப்படி கைது செய்யப்பட்டு ஓர் கொலைக் குற்றவாளியைப்போல பலவித வதைகளுக்காளானார்; இம்மாதிரி வதைத்தால் தான் அவர் மீது சாட்டப்பட்ட குற்றங்களை அவர் தாமே ஒப்புக்கொள்வாரென்பது அவரை விசாரணைசெய்தவர்களின் எண்ணம்.

காரணேசர் மகா அறிஞர்; தவிர, மிக்க தயாளகுணமுள்ளவர்; பொறுமையும் சாந்தமும் அமைந்துள்ளவர்; சித்திர வதைகளை அனுபவித்த போதிலும், தான் சொல்லவேண்டியது ஒன்றுமில்லாமையால், தான் ஒன்றும் வெளியிட முடியாதென்று மறுத்துவிட்டார். தைகலிகள் எல்லாக் குற்றங்களினின்றும் விடுதலை செய்யப்பட்டான். ஆனால் காரணேசரோ, தம் கௌரவ ஸ்தானம் உத்தியோகம் முதலியவைகளிலிருந்து தள்ளப்பட்டதுமல்லாமல், விசாரணைக்காக ஏற்பட்ட செலவுகளைச் செலுத்திவிட்டு, எக்காலத்திலும் ராஜ்யத்தின் புறம்பேயே வாழவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

காரணேசர் பிரஜைகளின் பொதுநன்மையை நாடியே எப்பொழுதும் உழைத்திருந்தபோதிலும், ஒரு பாபமுமறியா அவ்வுத்தமருக்கு விரோதமாக விசாரணை முடிந்தது அவர்களுக்குத் திருப்தியாகவே யிருந்தது. அவ்வளவு மாத்திரமா? இன்னும் என்ன சம்பவங்கள் நேரிடுமோ!

தமது ஸஹோதரன் மீது வீண் அபவாதம் ஏற்பட்டது என்று எப்பொழுது கேள்விப்பட்டாரோ, அந்த க்ஷணத்திலேயே தேவதத்தர் தம் உத்யோகத்தினின்றும் நீங்கி ஒதுங்கிவாழ்வாராயினார்; ஆனாலும், பிரஜைகள் இவர் உயிருக்கும் உலைவைத்தார்கள்; காயத்தினாலான வடுக்களும் அநேகருடைய விரோதமுந்தாம் இவர் சம்பாதனைகள்.

இப்படியிருக்க, நம் கதா சம்பவங்கள் வெகு மும்முரமாய் நிகழ்ந்துகொண்டு வந்தன. 167 - ௵ ஆகஸ்ட்௴ 20௳ காரணேசர் பூதனக்ருஹத்திலிருந்து வெளிப்பட்டு தேசப்ரஷ்டனாய்ப்போவதையும் அவர் அனுபவித்த சித்திரவதைகளால் அவர் அடைந்த மாறுதல்களையும் பார்க்க ஆவலுள்ளதாய் நகரமே திரண்டு வந்ததுபோலிருந்தது.

பொறாமையும் கபடமும் குடிகொண்ட மனத்தனான தைகலிகன் எல்லோருக்கும்முன்னே சிறைச்சாலையை நோக்கிப் பித்தம் பிடித்தவனைப்போலப் போய்க்கொண்டிருந்தான். அப்பொழுது தன்னுடன் வருபவர்களைப் பார்த்து காரணேசன் தன்னைச் சரிப்படுத்தும்படி லஞ்சங் கொடுக்கச் செய்த முயற்சிகள் இவ்விவை என்று வெகு உத்ஸாகத்துடன் சொல்லிக்கொண்டிருந்தான். 'பொய்யுடையொருவன் சொல்வன்மையினால் மெய்போலும்மே, மெய்போலும்மே' என்று அதிவீரராம பாண்டியர் கூறியதுபோல், அவன் கூறின அபத்தமொழிகளை வெகு ஆவலுடன் எல்லாரும் கேட்டு ஆனந்தமடைந்து தேவதத்த காரணேசர்களைத் தூற்றியும் மூத்கலனைப் போற்றியும் வந்தார்கள். அவன் வார்த்தைகளைக் கேட்கக் கேட்க அவர்களுக்குண்டான மனக்கொதிப்பிற்கு அளவில்லை. மாபாதகனான காரணேசனைப் போன்றவர்களை அவ்வளவு இலேசாய் விட்டுவிட்ட நியாயாதிபதிகள்மீது கோபம் மூண்டெழுந்தது அவர்களுக்கு. எல்லோருக்கும் முன்னே நின்றிருந்த ஒருவன், "அவர்களைச் சும்மா வெளியேபோகவிட்டுவிடவேண்டாம்" என்று சொன்னான்.

"ஆம், ஆம்; சிறைச்சாலைக்குப் போகலாம். சிறைச்சாலைக்கு" என்று ஒருகுரலாய் எல்லோரும் ஆரவாரித்தார்கள். எங்கு பார்த்தாலும் கத்தி, ஈட்டி, கோடரி முதலிய ஆயுதங்களைச் சுழற்றிக்கொண்டும், யமகிங்கரர்களைப்போலக் கொக்கரித்துக்கொண்டும், தம் நடையைத் துரிதப்படுத்திக்கொண்டும், "எங்கே அவர்கள்? தீர்த்துவிடுங்கள் ஒரே வீச்சில்!" என்று கூவிக்கொண்டுமிருந்தார்கள். பூதனக்ருஹத்தின் அருகில் எங்குபார்த்தாலும் பேரமளியாயிருந்தது.

இவர்கள் இம்மாதிரி கோலாஹலத்துடன் பேய்க்கூத்தாடித் திரிந்து வரும்போது, இவர்கள் யாரை நாடிவந்தார்களோ, அவர்களிலொருவன் இவர்களுக்கு முன்னேயே சிறிது தூரத்தில் போய்க்கொண்டிருந்தான். ஆனால்

பெண் என்றால் பேயும் இரங்கும்.

அதை ஒருவரும் கவனிக்கவில்லை. அவர்கள் மனம் வெறிமயக்கங்கொண் டலைந்ததுபோ லும்!

பூதனக்ருஹத்தின் வாயிலை யடைந்ததும் தேவதத்தர் வண்டியினின்றும் இறங்கி, மௌனமாய் வாயிற்படியைக் கடந்துசென்றார். அங்கிருந்த காவலனை நோக்கி "கிராத, உனக்குத் தெரியுமே! என் ஸகோதரன் தேசப்ரஷ்டனாய் விட்டானே; அவனை வெளியே அழைத்துப் போக வந்திருக்கிறேன்" என்றார். உடனே காவலன் கதவைத் திறந்து தேவதத்தரை உள்ளே விட்டான். தேவதத்தர் சிறைச் சாலையினுள்ளே பத்தடி போவதற்குமுன், சுமார் ஏழெட்டுவயதுள்ள ஓரழகிய கன்னிகை மிக்க பக்தி விநயத்துடன் தேவதத்தர் அருகில் வந்துநின்று, 'அண்ணா' என்றாள். "குழந்தாய், என்ன ஸமாசாரம்? காரணேசனுக்கு உடம்பு எப்படியிருக்கிறது?"

"அவர்பட்ட கஷ்டத்தைப்பற்றி ஒன்றும் பயப்பட வேண்டியதில்லை. அதெல்லாந்தான் ஒழிந்துவிட்டதே." "ஆனால் எதைப்பற்றித் தான் பயப்படவேண்டுமம்மா?" "அம்மம்மா! அவருக்கு இன்னும் என்ன தீங்கிழைப்பார்களோ என்று பயப்படுகிறேன்."

"ஓ, அப்படியா! ஆம், ஆம். அதோ இரைகிற ஜனங்கள் என்ன செய்வார்களோ என்று தானே? இல்லையா?"

"ஆமாம், ஆமாம்! அவர்கள் சொல்வது உங்கள் காதில் விழுகிறதோ இல்லையோ?"

"ஆமாம், கேட்கிறது. அவர்கள் இப்பொழுது மகா உக்கிரமா யிருக்கிறார்கள். ஆனால் ஒரு வேளை எங்களை நேரிற்கண்டால் சாந்தமடைவார்கள். நாங்கள் அவர்களுக்கு எப்பொழுதும் நன்மையே செய்துவந்தோமல்லவா?"

என்று சொல்லிவிட்டு எப்பொழுதும்போல சாந்தகுணசீலராய் தம் ஸஹோதர னிருக்கும் அறையை நாடிச்சென்றார். ஆனால் அவர் முகம்மாத்திரம் சற்று முன்பு இருந்ததைக்காட்டிலும் சிறிது மனக்கலக்கத்தைக் காட்டிற்று.

### இரண்டாம் அத்தியாயம்

### இரண்டு ஸஹோதரர்கள்

சிறைக்காவலன் கிராதனுடனும், அவன் மகள் கல்பகத்துடனும் சற்றுப் பேசியபிறகு தேவதத்தர் தம் ஸஹோதரனிருந்த அறையை நாடிச்சென்றார். காரணேசர் பலவிதஹிம்ஸைகளை அனுபவித்துக் கடைசியாக ஓர் அறையில் கட்டில் ஒன்றில் படுத்திருந்தார். யாதொரு காரணமுமின்றி அவர் ஒப்புக்கொள்ளக்கூடிய குற்றமே கிடையாது; அவரும் எதையும் ஒப்புக்கொண்டு வெளியிடவில்லை. மூன்றுநாள் பலவிதஹிம்ஸைகளுக் குள்ளானார். மரணமே தமக்குக் கதியென்று எதிர்பார்த்திருந்தவர் தேசப்ரஷ்டத்வந்தான் தமக்குத் தீர்மானிக்கப் பட்டது என்பதைக் கேட்டு ஸ்வயேச்சை யடைந்துவிட்டதாக எண்ணினார். படுத்துக் கொண்டு இவ்விஷயங்களைப்பற்றியும் தம் தமையனைப்பற்றியும் எண்ணமிட்டுக் கொண்டிருக்கையில், கதவு திறக்கப்பட்டது. தேவதத்தர் உள்ளேநுழைந்து காரணேசரின் படுக்கைக்கு அருகில் சென்று கண்களில் நீர் ததும்ப மிக்க உருக்கத்துடன் "ஆ தம்பி! காரணேசா! என்னகஷ்டம் அனுபவிக்கும்படி நேரிட்டதடா!" என்று சொல்லிக் கதறினார்.

"அண்ணா! எனக்கு இனிக்கஷ்டமேயில்லை; நீ என் பக்கத்தில் இருக்கிறாயே, எனக்குக் கஷ்டமேது?"

"அடா, கண்மணி! உன்னை இந்த ஸ்திதியில் பார்ப்பதற்கு என் மனம் பதறுகிறதேடா! ஸஹிக்க முடியவில்லையே!"

"அது கிடக்கட்டும் அண்ணா! அவர்கள் என்னை ஹிம்ஸித்தபோது உன்னைப்பற்றித் தான் அண்ணா! நினைத்துக்கொண்டு வருந்தினேன். இப்பொழுது நீ என்பக்கத்தில் வந்திருக்கிறாய். நம் கஷ்டமெல்லாம் மறந்து போய் விட்டது. நீ என்னை அழைத்துக் கொண்டு போகத்தானே வந்திருக்கிறாய்?"

"ஆம்."

"என் ரணமெல்லாம் அப்பொழுதே பறந்து போச்சு. என்னை மெள்ளப் பிடித்து எழுந்திருக்கச்செய். நான் நடக்கிறதைச் சற்றுப் பார்."

"அப்பா, நீ வெகுதூரம் நடக்கவேண்டியதில்லை. குளத்தங்கரையில் நம் வண்டி வந்து நிற்கிறது."

"எல்லாம் சரிதான். நீ எவ்வளவோ அபூர்வமான செயல்களையெல்லாம் நாட்டிற்காகச் செய்திருக்கிறாய். ஆனாலும் தற்காலம் இந்த ஆரவாரத்தில், நாட்டுப் பகைமையாகிய பேரலையில், இக்கடுங்காற்றில் உன் ஸஹோதரனை

பூகனக்ருஹத்திலிருந்து அழைத்துப்போவது முடியாதுபோ லிருக்கிறதே !"

"காரணேச! எல்லாம் பகவத் ஸங்கல்பம். நம்மா லானமட்டும் பார்க்கலாம். ஆ! முதலில் உன்னை ஒன்று கேட்கவேண்டும்."

"ஹாஹா! அதென்ன, அப்படி இரைச்சல்? எவ்வளவு உக்கிரம்! யார்மேல் இதெல்லாம் ?"

"எல்லாம் நம்மிருவர்பேரிலுந்தான். அப்பா காரணேச! எதிர்க்கட்சிக்காரர் நம்மீது அனேக கோள்கள் சொன்னது போதாமல் நாம் பாஞ்சால நாட்டாருடன் ஸமாதானம்செய்ய முயன்றதாகவும் தூற்றுகிறார்கள்."

"அட, மடமக்களா !"

"ஆம், அவர்கள் சொல்வது இதுதான். லோகபாலனுக்கு நாம் எழுதிய நிருபங்களை அவர்கள் கண்டுபிடித்துவிட்டார்களானால், நீ சொல்வதுபோல் நான் எவ்வளவு சாமார்த்தியசாலியா யிருந்தபோதிலும், ஸௌக்கியமாய் நாட்டைவிட்டு வெளிச்செல்வதற்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்யமுடியாது. நம் ஜன்மபூமியில் நமக்குள்ளபற்றிற்கும் நம்நாட்டின் விருத்திக்கும் செல்வத்திற்கும் நான் உழைத்துவந்ததின் அத்தாட்சியாயுள்ள அந்நிருபங்கள் எதிர்க்கட்சியின் கையில் கிடைத்துவிட்டதானல் நமக்கு அடியோடு நாசந்தான். என்னிடம் வருவதற்கு முன்னமேயே நீ அவைகளை ஊரில் நெருப்பி லிட்டுவிடவில்லையா ?"

"அண்ணா! இந்நாட்டில் வெகு சாமர்த்தியசாலி, தயாளு, உத்தமன் என்பதற்குச் சாட்சி பகர்கின்ற அந்நிருபங்களை எரிக்க யாருக்குத்தான் மனம் வரும்? நான் அவைகளை வெகு பத்திரமாகக் காப்பாற்றிவருகிறேன்."

"அப்படியானல் இன்றோடு நமக்கு முடிவு வந்துவிட்டது" என்று அமைதியுடன் கூறினார் தேவதத்தர்.

"அப்படி யொன்றுமில்லை; நம்முயிர் தப்புவதுமன்றி எல்லோருக்கும் நல்லவர்களாயும் ஆய்விடலாம்."

"எல்லாம் ஸரிதான். அக்கடிதங்களை என்ன செய்தாய் ?"

"பார்க்கவன், உனக்குத் தெரியுமல்லவோ ? என்னிடம் பாடம் கற்றுக்கொள்ள அடிக்கடி வருவானே! அவனிடத்தில் கொடுத்துப் பத்திரப்படுத்தச் சொல்லியிருக்கிறேன்." "ஐயோ பாபமே! மஹா சாமர்த்தியசாலி யாயிற்றே; கபடமற்ற கண்ணியனாயிற்றே! அவனிடத்திலா இந்த ரஹஸ்யங்கள் இருக்கின்றன! ஹா! கஷ்டம், கஷ்டம்! அவனுக்கும் விபரீத காலம் வந்துவிட்டதா ?"

"ஏன் அண்ணா! அவனுக்கு விபரீதகாலம்? அவனைப்பற்றி எனக்கொன்றும் தெரியாதா ? அவன்மனத்தில் உதிக்கும்எண்ணங்கள், அபிப்பிராயங்கள் எல்லாவற்றையும் நானறிவேன். அது கிடக்கட்டும். ரஹஸ்யத்தை அவன் எப்பொழுதும் வெளிப்படுத்தமாட்டான். அவனுக்கு அதைப்பற்றி ஒன்றுமே தெரியாது."

தேவதத்தர் வியப்படைந்தவராய் தம்பியை நோக்கி "அப்பா! அப்படியானல் அவைகளை அப்படியே கொளுத்திவிடும்படி சொல்லியனுப்பிவிடுவோம்; இன்னும் சற்று அவகாசம் இருக்கிறது" என்றார்.

"ஆனல் யாரை அனுப்புவது?"

"நம் மாயாண்டி யிருக்கிறான். நமக்குத் துணையாக அழைத்துப்போகலாமென் றிருந்தேன். அவன் என்னுடன் இங்கு வந்திருக்கிறான்."

"அந்தக் கடிதங்களை அவர்கள் கண்டுவிட்டால் நம்மைக் கொன்றுவிடுவார்களா? உனக்கு என்ன தோன்றுகிறது?"

தேவதத்தர் பதில் ஒன்றும் சொல்லவில்லை. கையால்மட்டும் சிறைக்கூடத்தின் வெளியைச் சுட்டிக்காட்டினார். அதே ஸமயம் பேரிரைச்சலும் ஆரவாரமும் பயங்கரமான கொக்கரிப்பும் உக்ரத்துட னெழும்பியது.

"ஆஹா! இவர்கள் செய்யும் கோலாஹலம் வெகு நன்றாயிருக்கிறது! இப்படி இவர்களிருப்பதின் தாத்பர்யமென்ன ?"

தேவதத்தர் மெதுவாய் சாளரத்தைத் திறந்தார். "துரோகிகளைக் கொல்லுங்கள்!" என்று கோஷம் கிளம்பியது.

"காரணேசா, காது கேட்கிறதா ?"

"துரோகிகளா ? யாரைச் சொல்லுகிறார்கள்? நம்மைத்தான்போ லிருக்கிறதே !"

"ஆம், நம்மைத்தான்."

"மாயாண்டி எங்கே?"

"அதோ வெளியில் தாழ்வாரத்தில் நிற்கிறான்."

"அவனை உள்ளே வரச்சொல்லேன்."

21. பெண்டிர்க்கு அழகு பேசாதிருத்தல்.

உடனே தேவதத்தர் கதவைத் திறந்து மாயாண்டி என்னும் தம் வேலைக்காரனைக் கூப்பிட்டு "மாயாண்டி, நம் தம்பி சொல்வதைக் கவனமாய்க் கேட்டுக்கொள்" என்றார்.

"அண்ணா! வாய்வார்த்தையாய் சங்கதி சொல்லியனுப்பினால் போதாது. கஷ்டகாலம்—நான் கடிதம் எழுதியாகவேண்டும்."

"ஏனப்படி?"

"அக்கடிதங்களைப்போட்டுப் பத்திரப்படுத்தியிருக்கும் பெட்டியை என் நேர் உத்தரவில்லாமல் பார்க்கவன் ஒன்றும் செய்யமாட்டான்.

"ஸரிதான். உன்னால் எழுதமுடியுமா?" என்று நசுக்குண்ட விரல்களையும் ரணமாயிருந்த கையையும் பார்த்துக் கூறினார் தேவதத்தர்.

"மசிக்கூடும் பேனாவும் இருந்தால் எப்படி முடியாமற்போகும் என்பதைப் பார்க்கலாம்."

"இதோ ஒரு பென்ஸிலாவது ஸமயத்திற்கு இருக்கிறது இங்கே."

"ஏதாவது காகிதம் இருக்கிறதோ? என்னிடத்தில் ஒன்றுமில்லை. எல்லாவற்றையும் பிடுங்கிக்கொண்டார்கள்."

"இதோ பகவத்கீதை. முதல் தாளைக் கிழித்துக்கொள்."

பென்ஸிலை எடுத்து, காரணேசர் மிக்க சிரமத்துடன் எழுதத் தொடங்கினர்.

"என் அன்பார்ந்த பார்க்கவ!—உன்னிடம் நான் வைத்திருக்கும் பெட்டியை அப்படியே தீயிலிட்டுவிடு. அதைப் பாராமலும் திறவாமலும் அதிலிருப்பவை எக்காலத்தும் உனக்கே ரஹஸ்யமாயிருக்கும் வண்ணம் தீக்கிரையாக்கிவிடு. இப்படிப்பட்ட ரஹஸ்யங்களை வைத்திருப்பவர்களுக்கு இவைகளே யமனென்று நீ கருதக்கடவாய். அதை சாம்பராக்கினையோ, எங்களுக்குஉயிர்ப்பிச்சை தந்தவனாவாய். ஆசீர்வாதம். காரணேசன்.

ஆகஸ்ட்மீ 20௳ 167—ஹ."

தேவதத்தர் கண்களில் நீர் ஆறுய்ப்பெருக்கி அக்கடிதத்தை வாங்கி மாயாண்டியிடம் கொடுத்து ஏதோ சங்கதிகள் சொல்லியனுப்பினார்.

பிறகு பகவந்நாமாவை ஸ்மரித்து தேவதத்தர், "அப்பா காரணேசா! நாம் போகலாம் வா" என்றார்.

## மூன்றாம் அத்தியாயம்

### படுகொலை

பூதனக்ருஹத்தின் வெளியில் பிரஜைகளின் ஆவேசம் மும்முரமடைந்துவருகின்றது. உள்ளே தேவதத்தர் தம் ஸஹோதரரை அழைத்துக்கொண்டுபோவதில் கண்ணுங் கருத்துமாயிருந்து துரிதப்படுத்திவருகிறார். அச்சமயத்தில் நகரஸபாமண்டபத்தை நோக்கிப் போகிற சிலருடன் வெகுவிரைவாய் போய்க்கொண்டிருக்கிறான் ஒருவன். அவனுக்கு வயது சுமார் 22 அல்லது 23 இருக்கலாம். உத்ஸாகக் குறிகளைக் காணோம் அவன் முகத்தில். தன்னை யாராவது பார்த்துவிடுவார்களோ என்று, கண்ணைத் துடைக்கும் பாவனையாய்த் தன் கைக்குட்டையால் அடிக்கடி முகத்தை மூடிக்கொள்கிறான். சாதாரண உடைதான் தரித்திருக்கிறான்; மற்றவர்களைப்போல் கையில் ஆயுதங்களைக் காணோம். அவன் கைகள் மெலிந்து நீண்டிருக்கின்றன. பூதனக்ருஹத்தில் நடக்கும் காட்சிகளை வெகு ஆவலுடன் பார்த்துக்கொண்டிருந்த ஒரு போர்வீரனுடன் வந்துகொண்டிருக்கிறான் அவன்.

கோவீதியின் கடையில் வந்ததும் அந்தமனிதன் நகர ஸபாமண்டபத்தின் மேன்மாடியை நோக்கலானான். அவ்விடத்தில் திறக்கப்பட்டிருந்த ஒரு ஜன்னல்வழியாக ஒருவன் ஜனங்களுக்கு ஏதோ சொல்லவந்தான்.

"அம்மாடிமேல் இருப்பது யார்?" என்று போர்வீரனை அவ்வாலிபன் கேட்டான்.

"அவர்தாம் மோஹன்லால். ஜனப்பிரதிநிதிகளில் ஒருவர்" என்றான் போர்வீரன்.

"எப்படிப்பட்டவர் அவர்? அவரை உனக்குத் தெரியுமா?"

"மஹராஜ், அவர் மஹா கௌரவம் வாய்ந்தவரென்று ஜனங்கள் சொல்லிக்கொள்கிறார்கள். அவ்வளவுதான் எனக்குத் தெரியும். எனக்கு அவர் சிறிதாவது அறிமுகம் கிடையாது."

"ஸரி, சற்றுநின்று எல்லாவற்றையும் பார்க்கலாம்."

அப்படியே யாகட்டுமென்பதற் கறிகுறியாய்த் தலையை யசைத்து மௌனமாயிருந்தான் போர்வீரன்.

"இம் மோஹன்லால் கௌரவஸ்தராய்மட்டும் இருப்பவராயின் இப்பித்தம்பிடித்து அலை

யும் ஜனங்களின் வேண்டுகோளுக் கிணங்கியே பேசமாட்டார்'' என்றான் வாலிபன். இவன் யாரென்றாலோ புதிதாய் நியமிக்கப்பட்ட நாட்டுத் தலைவனாகிய முத்கலன்!

மோஹன்லால் பேச எவ்வளவோ முயன்றும் அவன் மொழிகள் ஜனங்களின் செவியில் நுழையவில்லை. கைகளையும் கால்களையும் ஆட்டிப் பலவித சைகைகள் செய்வதுதான் தெரிந்தது. தான் சொல்வதை ஒருவரும் கேட்கிறதில்லை என்று தெரிந்தவுடன் திரும்பவும் மேல்மண்டபத்துள் நுழைந்தான்.

முத்கலனும் போர்வீரனும் அங்கேயே நின்றுகொண் டிருந்தார்கள். ஜனக்கூட்டம் ஸபாமண்டபத்துள் ஆரவாரத்துடன் நுழைந்துசெய்யும் அமளி வெகு நன்றாய் அவர்கள் செவிக்கெட்டியது. திடீரென்று அரவமடங்கியது. மறுபடியும் க்ஷணநேரத்தில் முன்னிலும் பன்மடங்கதிகமாய்க் கிளம்பி அக்கட்டிடமே அதிர்ந்துவிழும்படி பேரிடிபோல முழங்கியது. கீழே படிக்கட்டுகள் மூலமாய் வெகு பரபரப்புடன் கூட்டங் கூட்டமாய்த் திரண்டு வாயிலி னருகில் வந்துசேர்ந்து புற்றிலிருந்து ஈசல் புறப்படுவதுபோல் வெளிவந்தார்கள் அவர்கள். இப்படி வந்தவர்களின் முதலில் இருந்தான் தைகலிகன்; மகா ஆத்திரத்துடன் பறந்தான்; குடிவெறிகொண்டவனைப்போல் பல்லைக்காட்டி இளித்தான்; முகம் பார்க்கப் பயங்கரமாயிருந்தது.

'கைக்கு வந்துவிட்டது, கைக்கு வந்துவிட்டது' என்று ஓர் காகிதச் சுருளை கையிலெடுத்து உதறிக் காட்டினான்.

'ஹா, உத்தரவு வாங்கிவிட்டார்கள்' என்று போர்வீரன் பிரமையடைந்தவன்போல் முத்கலனுக்குச் சொன்னான்.

சிறைக்கூடத்தின் வெளியிலும் அருகிலும் ஏராளமான ஜனங்கள் கூடியிருந்தார்கள். இவர்கள் செய்யும் ஆரவாரத்தையும் அக்கிரமங்களையும் வெகு சாமர்த்தியத்துடன் அடக்கிக் கொண்டிருந்தார்கள் சில குதிரைவீரர்கள். ''இதோ உத்தரவு'' என்று பதினாயிரம் பேர்கள் கூவினார்கள்; தைகலிகன் ஸேனாதிபதியிடம் சென்று அச்சீட்டை நீட்டினான். அவனோ அதைக் கண்டதும் மதிகலங்கியவனாய் படித்துப்பார்த்து ''இவ்வுத்தரவிற்குக் கையெழுத்திட்டவர்களே காரணேசரின் கொலையாளிகள், இவ்வபவாதமான உத்தரவில் ஒரெழுத்து எழுதுவதைக் காட்டினும் என் இருகைகளையும் நானாயிருந்தால் இழந்து விடுவேன்'' என்று உரத்துச் சொன்னான். அச்சீட்டைத் தன்னிடமிருந்து எடுத்துக்கொள்ள வந்தவனொருவனைத் தம் கத்திமுனையால் ஒதுக்கிவிட்டு ''சற்றுநிதானி; இத்தகைய ரிகார்டுகள் வெகு பத்திரமா யிருக்கவேண்டும்'' என்று சொல்லி அதை மடித்துத் தன் சட்டைப்பையில் போட்டுக்கொண்டான். பிறகு தன் வீரர்களை வந்தவழியை நோக்கித் திரும்ப ஆக்ஞாபித்தான். பிறகு மெதுவாய்—ஆனால் அருகிலுள்ள எல்லோர் காதிலும் நன்றாய்ப் படும்படியாய், ''ஆஹா, கொலைபாதகர்காள்—உங்கள் வேலையைச் செய்யுங்கள்'' என்றான். உடனே பயங்கரமாய் ஊளையிட்டு இரையத் தொடங்கிவிட்டார்கள்.

தேவதத்தர் தம் ஸஹோதரருக்குக் கைகொடுத்து உதவி, துரிதமாய்ப் புறப்பட்டுக் கொண்டிருக்கையில் தங்களுக்கு நேரிட்டிருக்கும் ஆபத்தை எவ்விதத்திலும் அதிகமாய்ச் சொல்லவில்லை. தம் ஸஹோதரரின் தோளில் சாய்ந்தவண்ணம் படியில் இறங்கிவருகையில் கீழே கல்பகம் நடுக்கத்துடன் நின்றிருப்பதைக் கண்டார் காரணேசர்.

''அண்ணா! என்ன துரதிருஷ்டம்!''

''என்ன சமாசாரம்? குழந்தாய்!'' என்றார் தேவதத்தர்.

''வீரகேசரியின் ஸேனையை அனுப்பிவிடும்படி உத்தரவு பெறுவதற்கு நகர ஸபாமண்டபம் போயிருக்கிறார்களாமே!''

''ஆ, அப்படியா! வெளியிலுள்ள போர்வீரர்கள் போய்விட்டால் நமக்கு மஹா ஆபத்தாயிற்றே!''

(இன்னும் நடுக்கத்துடன்) ''நான் உங்களுக்குச் சொல்லவேண்டிய சமாசாரம் ஒன்றிருக்கின்றது!''

''என்ன சொல்லப்போகிறாயம்மா?''

''ஜனங்கள் நடமாட்டமில்லாத அடுத்த தெருவிற்குப் போகும் தோட்டவழியாய் புறக்கடைக் கதவைத் திறந்து போய்விடலாமே! வாசல்வழியாய் வருவார்கள்வருவார்கள் என்று அவர்கள் காத்துக்கொண்டிருக்கும்போது நீங்கள் நகரைவிட்டு எந்த வழியாய்ப்போக

பெண்ணுக்கும் பொன்னுக்கும் தோற்பு உண்டா?

வேண்டுமோ அதைப்போய் அடைந்துவிடலா மல்லவா ?"

"ஆனல் இவனல் நடக்கமுடியாதே!"

காரணேசன் (உறுதியுடன்) "நான் நடக்க முயல்கிறேன் என்னு லானவரையில்."

"உங்கள் வண்டியிருக்கிறதோ இல்லேயோ?"

"அது வாசலிலன்றோ நின்றிருக்கிறது."

"இல்லே, இல்லே. உங்கள் வண்டிக்காரன் நிரம்ப நல்லவனென்று கருதி வண்டியைப் பின்புறம் கொண்டுவரச் சொல்லியிருக் கிறேன்."

இரு ஸகோதரரும் ஒருவரையொருவர் எறிட்டுப்பார்த்துப் பின் கல்பகத்தை வெகு விசுவாஸத்துடன் நோக்கினர்கள்.

"எல்லாம் ஸரிதான். கிராதன் கதவைத் திறப்பானு என்பதுதான் ஸந்தேகம்."

"எங்கப்பா திறக்கவே மாட்டார். எனக்கு அது முன்னமே தெரியும். அங்கே அவர் என்னமோ பேசிக்கொண்டிருக்கையில் அவர் கொத்திலிருந்து சாவியைக் கொண்டுவந்து விட்டேன்."

"குழந்தாய்! உனக்கு நாங்கள் என்ன பிரதி யுபகாரம் செய்யப்போகிறோம். நான் இருந்த அறையில் என் கீதை யிருக்கிறது. ஞாபகார்த்த மாய் அதை யெடுத்துவைத்துக்கொள். நீ ஸௌபாக்கியவதியாய் இருப்பாய் !"

"ஆஹா, அப்படியே எடுத்துக்கொள்கி றேன்" என்று சொல்லிவிட்டுப் பிறகு—

"எனக்கு ஸம்ஸ்கிருதம் தெரியவில்லேயே?" என்று துக்கித்தாள்.

"இரைச்சல் அதிகமாய்க்கொண்டே வருகி றது. தம்பி ! இனிச் சற்றேனும் தாமஸிக்கக் கூடாது."

"இப்படியே என்னுடன் வாருங்கள்" என்று அப்பெண்மணி அவ்விருவரையும் உட்கட் டின் வழியாய் தோட்டத்திற்கு அழைத்துச் சென்றுள். அவள் போனவழியே சென்று, பத் துப்பன்னிரண்டு படிகளேக் கடந்து, ஓர் அகன்ற முற்றத்தில் வந்துசேர்ந்தார்கள். பெரிய மதிட்புறத்திலுள்ள இருப்புக் கதவை கல்பகம் திறக்கவும் ஸஹோதரர் இருவரும் ஜன ஸந்தடியில்லாத ஒரு தெருவில் தங்கள் வண்டியிருப்பதைக் கண்டார்கள்.

"ஜல்தி, ஜல்தி, எசமாங்க—ஓங்களுக்கு எல் லாம் கேக்குதோ யில்லேயோ!" என்ருன் வண் டிக்காரன்.

"பகவான்தான் துணே !—என்னமோ அவர் கள் வாயிற்கதவைப் பெயர்க்கிருர்கள்போல் இருக்கிறதே" என்ருள் கல்பகம்.

தேவதத்தர் வெகு விரைவாய் தம் ஸஹோ தரனுடன் வண்டியிலேறி உட்கார்ந்து "அடே கீழவாயிலுக்கு ஓட்டு" என்று வண்டிக்காரனே எச்சரிக்கை செய்தார்.

கல்பகம் நினேத்தவண்ணம் வெறிகொண்ட அம்மக்கள் சிறைக்கூடத்தின் கதவைப்பிடுங்கி விடுவதற்கு முயன்றுகொண் டிருந்தார்கள். அவர்களே அடக்குவார் யாருமில்லே.

கதவும் மதிற்சுவரும் மிக்க உறுதியாயிருந் தனவேனும், கிராதன் கதவைத் திறக்க முடியாதென்று கண்டிப்பாய் மறுத்தனனே னும், அது எத்தனே நாழிகைதான் அப்பித்தர் களுக்குமுன் நிற்கும்? சிறைக்காவலனும் கிரா தன் மனமுடைந்து அவர்களே கதவைத் தகர்த்துவிடுவதினும் தானே திறந்து விடுவது நலமா என்ற யோசனேயில் ஆழ்ந்தவனுயிருக் கையில், யாரோ தன் வேஷ்டியை இழுத்ததா கத் தெரியவந்தது. திரும்பிப் பார்த்தான். தன் மகள் கல்பகம்.

"இவர்கள் போடும் இரைச்சலேக் கேட் டாயா ?"

"ஆஹா, நன்ருய்க் கேட்டேன். நானுயிருந் தால்—"

"என்ன செய்வாய்? கதவைத் திறந்துவிடு வாயோ ?"

"ஊஹூம்—மாட்டவே மாட்டேன்."

"ஆனல் நம்மைக் கொன்றுவிடுவார்களே!"

"நம்மைப் பார்த்தால்தானே ?"

"எப்படி நம்மைப் பார்க்கமாட்டார்கள் ?"

"ஒளிந்துகொள்கிறது."

"எங்கே ?"

"ரஹஸ்யமா யிருக்கிறதே அந்த நிலவறை யில். இரண்டுபேரும் உள்ளே புகுந்து உட்பக் கம் பூட்டிக்கொள்ளலாம். அவர்கள் வெளிச் சென்ற பிறகு நாம் அங்கிருந்து வந்துவிட லாம்."

"நீ சொல்வது நிரம்ப ஸரி! கண்ணே, உனக்கு இவ்வளவு தோன்றிற்ரு?" என்ருன்.

வெளியில் ஜனங்கள் உக்ராவேசத்துடன் கதவைத் தகர்க்கிருர்கள். கதவும் உடைந்து

விழுந்து, எல்லோரும் உள் நுழைகிற சமயம், கல்பகம் ஒரு பொறிக் கதவைத் திறந்து "அண்ணா, வா வா!" என்று கூவினாள்.

"நம் கைதிகள் !"

"பகவத் ஸஹாயந்தான் அவர்களுக்கு !" கிராதன் தன் மகளுடன் பொறிக்கதவின் கீழ் நுழைந்தான். அதுவும் மூடிக்கொண்டது. ஜனங்களும் சிறைக்கூடத்தி னுள்ளே நுழைந்து விட்டார்கள். கல்பகமும் கிராதனும் ஒளிந்துகொண்ட அறை வெகு மறைவான இடம். நகராதிபருக்கு அது தெரியுமேயொழிய மற்றெவருக்கும் தெரியாது. உள் நுழைந்த ஜனங்கள் இரத்தவெறி கொண்டவர்களாய் "அடி! கொல்லு! பாபிகள்! துரோகிகள்!" என்று கொக்கரித்தார்கள்.

இனி ஒருக்ஷணமாவது எதனிமித்தமும் தாமஸிக்க ஸாத்யமில்லை; வெகு விரைவில் இவ்விரு ஸஹோதரரும் வெளிக்கிளம்பினாலொழிய உயிர் தப்பமுடியாது. சிறைக்கூடத்தில் நுழைந்த நகரவாசிகள் எப்படியாயினும் இவர்களைப் பிடித்துச் சற்றேனு மிரக்கமில்லாமல் அவ்வேளையில் தங்கள் வாள்களுக்கிரையாக்கி விடுவார்கள். ஆகவே வண்டிக்காரனை வண்டியை வேகமாய்விடத் தூண்டினார்கள். சிறிது நேரத்திற்குள் வண்டி திடீரென நின்றுவிட்டது.

"என்ன ஸமாசாரம்?" என்றார் தேவதத்தர்.

"எசமாங்க, கீழவாசல் சாத்தி யிருக்குதுங்க!" என்று நடுக்கத்துடன் சொன்னான் வண்டிக்காரன். தேவதத்தர் வண்டிக்காரன் சொன்னது சரிதான் என்று ஜன்னல் வழியாய் எட்டிப்பார்த்தார்.

"பாதகமில்லை; நீ ஓட்டு. (நாட்டைவிட்டு நீங்கிப்போகும்படி செய்த) தீர்மான உத்தரவு என் கையிலிருக்கிறது. வாயிற்காவலன் கதவைத் திறப்பான்" என்றார்.

தேவதத்தர் ஜன்னல் வழியாய் எட்டிப் பார்த்தபொழுது ஒருவன் அவர் முகத்தைக் கண்டு இன்னாரென அறிந்துகொண்டு வெகு வேகமாய் ஓடிச் சிலருடன் தான் கண்டதை ஆச்சரியத்துடன் அறிவித்தான். இதற்குள்ளாக வண்டி கீழவாயிலின் பக்கத்தில் வந்து நின்றது. வண்டிக்காரன் காவலனை விளிதது கதவைத் திறக்கும்படி சொல்ல, அவன் நகரதிகாரிகள் திறவுகோலைத் தனனிடமிருந்து அன்று காலையில் வாங்கிக்கொண்டு போய்விட்டபடியால் முடியாதென்று சொல்லிவிட்டான்.

"சரி; மனுஷ்ய யத்தினத்திற்குக் குறைவில்லாமல் செய்துவிடலாம்; பிறகு பகவத்சங்கல்பம் இருக்கவே இருக்கிறது. வடக்குவாயில் வழியைப் பார்க்கலாம். அதோ இருக்கிற கூட்டத்தின் மத்தியில் வெகு வேகமாய் விட்டு இடதுபக்கம் இருக்கும் வீதியில் திருப்பு; அந்த ஒருவழிதான் இப்பொழுதிருக்கிறது" என்றார் தேவதத்தர்.

குதிரைகள் வெகு வேகத்துடன் வருவதை ஜனங்கள் கண்டவுடன் உடனே வீதியின் குறுக்கே அணைபோட்டதுபோல் நின்றுவிட்டார்கள். "அடே பயலே! நிறுத்து, நிறுத்து!" என்று கூவிக்கொண்டே தங்கள் தடிகளைச் சுழற்ற ஆரம்பித்தார்கள். வண்டிக்காரன் குதிரைகளை வெகு ஆத்திரத்துடன் முடுக்கிய போதிலும் அவைகள் மேலே செல்ல வழியில்லாமையினால் நின்றுவிட்டன.

"அகப்பட்டுக்கொண்டார்கள்! அகப்பட்டுக்கொண்டார்கள்!!" என்ற ஒரே அமளி எங்கும் பரவியது. வண்டியை ஜனங்கள் சூழ்ந்துவிட்டார்கள். சிலர் குதிரைகளை அவிழ்த்துவிட்டனர். ஒருவன் வண்டிக்காரனை இழுத்துத்தள்ளித் துவைத்துவிட்டான். வேறு சிலர் வண்டியைத் திறந்து காரணேசரை இழுத்துவர, அவர் பாதம் பூமியில் படுவதற்கு முன்னமேயே ஒரு கொலைபாதகன் அவர் மண்டையை நோக்கி ஓங்கித் தன் தடியா லடித்துவிட்டான். அவர் மண்டை பிளந்து அவர்கள் கால்களின் கீழ் பிராணனைவிட்டார்.

"ஹா, தம்பீ, தம்பீ!" என்று கதறியழுது அந்த கோரத்தைக் காணச் சகியாராய்க் கண்களைத் தம் கையால் மூடிக்கொண்டார் தேவதத்தர்.

"அடே! கண்ணையா மூடிக்கொள்கிறாய்? இதோ அவைகளைப் பெயர்த்துவிடுகிறேன்" என்று ஒருவன் தன் ஈட்டியால் அவர் கண்ணை நோக்கிக் குத்தினான். தேவதத்தர் இடறிக் கீழே விழுந்தார். எழுந்திருப்பதற்குள் அவர் மண்டையை நோக்கி மற்றோரடிவிழ, அப்படியே நிலத்தில் சாய்ந்து ஆவியை நீத்தார். ஹா! கொடுமை, கொடுமை!

மாநிடராய்ப் பிறந்து நற்பயனை யடைய விரும்பாமல் கேவலம் காட்டு மிருகங்களாம்

புலி, ஸிம்ஹங்களைப் போல இரத்தவெறி கொண்டு திரியும் இவர்களை என்னவென்று சொல்வது !

கொடிய பிராணிகள்கூடத் தம்மினமென்று கருதி சிலசமயங்களில் ஒத்துவாழ்கின்றன. இவர்கள் அக்கொடிய பிராணிகளிலும் கேவலமான பிசாசங்கள் என்றே சொல்லவேண்டும். இவர்கள் இம்மாதிரி தேவதத்த காரணேசர்களைக் கொலைபுரிந்து ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருக்கும் பொழுது, மாயாண்டி என்னும் வேலைக்காரன், தான் புறப்பட்டபிறகு நடந்த கோரசம்பவங்கள் ஒன்றையும் அறியாவனாய், ஓர் நல்ல குதிரைமீதேறி நன்னிழலமைந்த சாலைமார்க்கமாய்ச் சென்று தார்த்தூரக நகரை யடைந்தான்.

---

# நமது சிறு கதை

## OUR SHORT STORY

(205-ம் பக்கத் தொடர்ச்சி.)

### பத்தாம் அத்தியாயம்

### முயற்சியின் பயன்

முந்தின அத்தியாயத்திற் கூறிய சம்பவங்கள் நடந்து ஒரு வாரம் கழித்து, ஒருநாள் இரவு எட்மணி சுமாருக்குப் பரங்கிமலையில் முத்துக்குமாரசாமி பிள்ளையினுடைய பங்களாவில் ஓர் அறையில் பிள்ளையவர்களும் துரைசாமி பிள்ளையும் சம்பாஷித்துக் கொண்டிருந்தனர்.

முத்து.—துரைசாமி! அன்று சாயந்திரம் நாம் எழும்பூர் ரயில்வே ஸ்டேஷனில் சந்தித்தோமே, அதற்குப்பிறகு நடந்ததை யெல்லாம் சொல், பார்ப்போம்.

துரை.—தாங்கள் ஸ்டேஷனைவிட்டுச் சென்றபின், நான் மூன்றாவது வகுப்புப் பிரயாணிகள் இருக்குமிடத்துக்குச் சென்று, கூட்டத்தோடு கூட்டமாகக் கலந்துநின்றேன். அச்சமயத்தில் இரண்டு பெண்பிள்ளைகள் என் தாயார் பெயரையும் என் தாயாரைப்பெற்ற பாட்டனார் பெயரையும் சொல்வதைக் கேட்டு ஆச்சரியப்பட்டு அவர்கள் பேசியதைக் கவனித்தேன். அவர்கள் பேசியதிலிருந்து என் தாய்க்குக் கலியாணமாகவில்லையென்று என்தாயின் ஊரான குன்னத்தூர் முழுவதும் அபிப்பிராயப்பட்டதாகத் தெரியவந்தது. அது கேட்டுப் பெருந்துயரமுற்று, என்னை வளர்த்துக்காப்பாற்றிய என் தாயின் தமக்கை தன் மரணகாலத்தில் பல்லாவரத்தில் யாருடன் வசித்து வந்தாளோ அந்த ஸ்திரீயைக் கண்டு உண்மை யாதென்று கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டுமென நிச்சயித்து, பல்லாவரத்துக்கு அடுத்த ரயிலிலேயே சென்று, அந்த ஸ்திரீ குடியிருந்த வீட்டையடைந்து உள்ளே சென்று, "என் பெரியதாயார் இறக்குங்காலத்தில் ஏதாயினும் தஸ்தவேஜு வைத்துவிட்டுப் போனார்களா?" என்று கேட்டேன். அந்த அம்மாள் ஒரு கட்டுக் காகிதங்களைக் கொடுத்தாள். அக்கட்டிலுள்ள காகிதமொன்றை எடுத்துப் பார்த்ததில், சுபேதார் மேஜர் மாணிக்கம்பிள்ளை என் தாயாரைத் திருச்சானூரில் கலியாணஞ் செய்துகொண்டதாகவும், அவர் தம் மனைவியாகிய என் தாயார் அவருக்குப் பிற்காலம் அவர் சொத்து முழுவதையும் அடையவேண்டுமென்று ஓர் உயில் எழுதி, திருப்பதிசப்ரெஜிஸ்ட்ரார் ஆபிசில் ரெஜிஸ்தர் செய்வித்ததாகவும், அதில் ஒரு பல்லாவரம் கண்ணுசாமி பிள்ளையும், ஒரு பார்வதியம்மாளும் சாக்ஷிக் கையெழுத்துப் போட்டிருந்ததாகவும் தெரியவந்தது. பல்லாவரம் கண்ணுசாமி பிள்ளையென்ற மனிதன் ஒரு சமயம் பல்லாவரத்தில் முத்துசாமி பிள்ளையின் பங்களாவின் தோட்டக்காரனாகிய கண்ணுசாமி பிள்ளையாக விருக்கலாமென்று சந்தேகித்து, அம்மனிதனிடம் மாறுவேடம் பூண்டு சென்று இச்சங்கதியைக் குறித்துக் கேட்டேன்.

முத்து.—பலே துரைசாமி! ஒருவாரத்துக்குள் நிரம்பவேலை செய்து விட்டாயே! அத்தோட்டக்காரன் என்ன சொன்னான்?

துரை.—அவன் ஒன்றும் சொல்லமாட்டேன் என்கிறான். என் தாயை மணந்து கொண்டவர் அவனுக்கு எஜமானரா யிருந்தாராம். அவர் இன்னாரென்று எவருக்கும் சொல்லுவதில்லையென்று தன் எஜமானருக்கு

அவன் சத்தியஞ் செய்துகொடுத்தானாம். ஆகையினால் ஒன்றும் சொல்லமுடியாதென்கிறான்.

முத்து.—எஜமானனிடம் அவ்வளவு விசுவாசம் பாராட்டுபவன், எஜமானன் பிள்ளை பிறரால் இகழப்படும்பொழுது, உண்மையையுரையா திருப்பது தருமமா வென்று கேட்டுப் பார்த்திருக்கலாம்.

துரை.—அவ்வாறு நான் கேட்டதற்கு, அவன் எந்தக் காரியம் எப்படியானாலும், தான் சத்தியந் தவறமுடியாது என்று சொல்லிப் பிறகு பல்லாவரத்திலேயே சோற்றுக்கடை வைத்திருக்கும் நாகலிங்கமுதலியாரின் மனைவி பார்வதியம்மாள்தான் உயில்சாசனத்தில் கையொப்பமிட்ட மற்றொரு சாக்ஷியென்றும், அவள் தன்னைப்போல் வாக்குத்தத்தம் செய்திருக்கமாட்டா ளாகையால், அவள் உண்மையை யுரைக்கக்கூடும் என்றும் சொன்னான். அந்த அம்மாளிடமும் மாறுவேடம் பூண்டுபோய்ப் பேசினேன்.

முத்து.—இதற்குள்ளாக அதுவும் தீர்ந்து போயிற்றா? உன் பிறப்பைக்குறித்துப் பெருஞ் சந்தேகம் ஏற்பட்டு இன்னும் ஒருவாரமாக வில்லை. அதற்குள்ளாகவே அச்சந்தேகம் நீங்கியும் போய்விட்டதுபோ லிருக்கிறதே!

துரை.—இல்லை, இன்னும் நீங்கவில்லை. ஆனால் அது நாளைக் காலையில் நிச்சயம் நீங்கிவிடும்.

முத்து.—அவ்வளவு நிச்சயமான நம்பிக்கைக்குக் காரணமென்னவோ?

துரை.—அந்தப் பார்வதியம்மாள் என் தாயாரை மணந்துகொண்டவர் இன்னாரென்ற சங்கதி தனக்குத் தெரியுமென்றும், நான், முத்துசாமிபிள்ளை இருவர்களில் யார் அவளுக்கு அதிகப் பொருள் கொடுக்கிறார்களோ அவருக்கே அவ்விரகசியத்தை அவள் விற்கப் போவதாகவும் நான் யாரென அறியாமல் என்னிடம் வெளிப்படையாய்ச் சொன்னாள்.

முத்து.—நீ யாரென்று அவளுக்குத் தெரிவித்தாயோ?

துரை.—இல்லை இல்லை. நான் யாரோ திருச்சானூர்க் கோவிலைச் சேர்ந்த அதிகாரியென்று எண்ணிக் கொண்டிருக்கிறாள். தான் நாளைக் காலையில் முத்துசாமி பிள்ளையைப் பார்ப்பதற்காகச் சென்னைக்குச் செல்லுவதாகவும், அப்போது நான் அவள்கூடச் சென்று அவளுக்கு உதவியாயிருந்தால், எனக்கு நல்ல பரிசு தருவதாகவும் சொன்னாள். நானும் அதற்கிசைந்தேன். நாளைக்காலையில் அவளுடன் ரயிலேறிச் சென்னைக்குப் போகவேண்டும்.

முத்து.—அவள் அவ்விரகசியத்தை முத்துசாமிபிள்ளைக்கு விற்றுவிட்டால், என்ன செய்கிறது? எல்லாவற்றிற்கும் நான் நல்ல துப்பனொருவனை வரவழைத்து, நீயும் அவளும் நாளைக்காலையில் போகுமிடத்துக்கு உங்களைத் தொடர்ந்து வரும்படி அனுப்புகிறேன். சரி; இதிருக்கட்டும். சூதாணயக்காரர் சங்கதி என்ன? நான்கு நாட்களுக்குமுன் இன்னொருமுறை போலீஸ்காரர்கள் உன்னை வளைத்துக்கொண்டதும் அவர்கள் சூழ்ச்சியினால்தானோ?

துரை.—ஆம்; அவர்கள் சூழ்ச்சியினால்தான் என் பெரியதாயாருடன் பல்லாவரத்தில் வசித்துவந்த ஸ்திரீயைப் பார்க்கச்சென்றேனென்று சொன்னேனல்லவா? அப்போது அவள் குடும்பத்தவரின் பேச்சு வந்தது. அவள் தன் சகோதரனொருவன் சந்நியாசியாகி அஞ்ஞானிகளுக்குப் போதித்து வந்ததைப்பற்றி மிகவும் புகழ்ந்துபேசி, பெட்டியிலிருந்து ஓர் போடோ படத்தை யெடுத்து அதில் அச்சகோதரனைக் காட்டினாள். அப்படத்தைப் பார்த்ததும், என் நெஞ்சம் திடுக்கிட்டது. ஏனெனில், கங்காதர முதலியார் என்றும் வீரபத்திரமுதலியார் என்றும் பல பெயர்கள் பூண்ட சூதாணயக்காரர் தலைவன் உருவமும் அப்படத்தில் காணப்பட்டது. முகஜாடையினால் அவனும் அந்த ஸ்திரீயின் சகோதரனென்று தெரிந்து கொண்டேன்.

முத்து.—ஹா—ம்! உலகம் பெரிது பெரிதென்று எல்லாரும் சொல்லுகிறார்களே! நீ சொல்லுவதைப்பார்த்தால், அது மிகவும் சிறிதுபோ லிருக்கிறதே! அம்மனிதன் உனக்கு மிகவும் நெருங்கினவனாயிருக்கிறானே! ஆராய்ந்து பார்த்தால், அவன் உனக்கு நெருங்கிய தாயாதியாயிருப்பான்போ லிருக்கிறதே!

துரை.—அப்படித்தான் தோன்றுகிறது. அப்படத்தில் அவன் உருவத்தைக்காட்டி அவன்யாரென்று அந்த அம்மாளைக் கேட்டதில், அவள் அவன் தன் சகோதரன் விசுவலிங்க முதலியாரென்றும், தங்கள் குடும்பத்தில் அவனொருவன்தான் ஈசுவரபக்தி யற்றவனென்றும் சொல்லி

அவர் நாஸ்திகத் தன்மையை விளக்குவதற்காக இரண்டு நாட்களுக்குமுன் அவனிடமிருந்து வந்த காகித மொன்றைக் காட்டினாள். அதன் தலைப்பில் விசுவலிங்க முதலியாரது விலாசத்தைப் பார்த்தனவேயன்றி என் கண்கள் அக்காகிதத்திலுள்ள மற்றவிஷயங்களைக் கவனிக்கவில்லை. மூன்று நாட்களுக்குமுன் நான் அவ்விலாசத்திற் கண்ட திருவான்மியூருக்குச் சென்று, இராயசம் விசுவலிங்க முதலியார் வீடு எதுவெனக் கேட்டுத் தெரிந்துகொண்டு போய், அவ்வீட்டுக்குச் சற்றுதூரத்தில் நின்றுகொண்டே அதைக் கவனித்துப் பார்த்தேன். அப்பொழுது அஸ்தமித்து நான்குநாழிகையாகியிருக்கும். திடீரென்று ஒரு ஜட்காவண்டி வந்து அவ்வீட்டுவாசலில் நின்றது. அதிலிருந்து ஒருவன் குதித்து அவ்வீட்டுக் கதவை மடமடவென்று தட்டினான். விசுவலிங்கமுதலியார் கதவைத் திறந்துகொண்டு, லாந்தருங்கையுமாக வெளியே வந்தார். விசுவலிங்க முதலியாரை விளக்கு வெளிச்சத்தில் பார்த்து, அவர் சூதுநாணயக்காரர் தலைவன்தானென்பதை நிச்சயித்துக்கொண்டேன். அவர் திரும்பி உள்ளே சென்று, ஒரு கைப்பையுடன் திரும்பி வந்து, கதவை யிடித்தவனைப் பார்த்து, "குருசாமி! நான் திரும்பிவர எத்தனை நாட்களாகுமோ தெரியாது. நான் வரும்வரையில் வீட்டைப் பார்த்துக்கொள்ளவேண்டுவது உன் பொறுப்பு. ரயிலைப் பிடிக்கமுடியுமா? சரி, நேரமாகிறது. நான் போய்வருகிறேன்" என்று சொல்லிவிட்டு, வண்டியிலேறி வண்டியை வேகமாய் ஓட்டும்படி வண்டிக்காரனிடம் சொன்னார். அவர் புறப்பட்டுப் போனபிறகு குருசாமி என்ற மனிதன் வீட்டுக்கதவைப் பூட்டிக்கொண்டு லாந்தரை எடுத்துக்கொண்டு போனான். எப்படியாயினும் அவ்வீட்டினுள் புகுந்து, தலைவனுக்குச் சூதுநாணயக்காரர் எழுதிக்கொடுத்த ரசீதுகளைக் கைப்பற்றவேண்டுமென நிச்சயித்து கொல்லை வழியாய் வீட்டுக்குள் நுழைந்து, என் சொக்காய்ப் பையில் நான் வைத்துக்கொண்டிருந்த சிறு லாந்தரை யேற்றிக்கொண்டு, படுக்கை யறைக்குச் சென்று அங்குள்ள பீரோக்களையும் மேஜைகளையும் திறந்துபார்த்து, நான் தேடிய ரசீதுகளை எங்குங் காணாமல் மனவருத்தத்துடன் அவ்வறையை விட்டுப் புறப்படுகையில், ஓர் மேஜையின்மீது புதிதாய்எழுதித் தலையொட்டி போஸ்டுக்கு அனுப்பத் தயாராக வைத்திருந்த கடிதமொன்றைக் கண்டு, அதை யெடுத்து மெல்லப்பிரித்துப்படித்துப்பார்த்தேன். அதில், "திருவல்லிக்கேணி, வெங்கட்ரங்கம் பிள்ளை தெரு, 25-ம் நெ. வீடு, முத்தம்மாள்" என்று மேல்விலாசம் எழுதியிருந்தது. அதில் தன்னைச் சில துஷ்டர்கள் தூரத்திக் கொல்ல முயலுவதாகவும், தான் அன்றுமுதல் நான்கு நாட்களுக்குள் அவளை வந்து பார்க்காமற்போனால், அவள் உடனேபுறப்பட்டுத்திருவான்மியூருக்கு வந்து சமுத்திரக் கரையிலுள்ள குளத்துக்கு வடபுறத்திலுள்ள சவுக்குத் தோப்பில் குளத்தின் கரையிலுள்ள கோவிலுக்கு நேரெதிராக அதற்கு நூறு தப்படி தூரத்தில் சிறு கற்கள் குவிக்கப்பட்டிருந்த விடத்துக்குப்போய், அக்கற்களின் கீழே 'சென்னைப் போலீஸ் கமிஷனருக்கு' என்று விலாசம் எழுதிவைத்திருக்கும் ரசீதுக்கட்டை யெடுத்து உடனே தபாற்பெட்டியிற் போடவேண்டுமென்றும் எழுதியிருந்தது. அக்கடிதத்தைப் படித்துப் பார்த்தவுடன், நான் அவ்வீட்டைவிட் டகன்று, அக்கடிதத்திற் குறிப்பிட்ட விடத்துக்கு விரைந்து சென்று, அங்குள்ள கற்குவியலைக் கலைத்து அடியிலிருந்த காகிதக்கட்டை யெடுத்துப் பிரித்து, எனது கைலாந்தரின் வெளிச்சத்தில் அக்கட்டிலுள்ள காகிதங்களென்ன வென்று பார்த்தேன். அவைகள் யாவும் வெற்றுக் காகிதங்களாக இருக்கக்கண்டு திகைத்தேன். அச்சமயத்தில் "இன்னொருமுறை ஏமாந்து போனாய்!" என்று யாரோ ஒருவர் சொன்னார். அந்தப்புறமாய்த் திரும்பினேன். சமீபத்தில் ஒருவர் உட்கார்ந்திருக்கக் கண்டு அவரருகிற் சென்று, யாரென்று கேட்டேன். அவர் "இன்னொருமுறை ஏமாந்துபோனாய்!" என்று சொல்லி நகைத்தார். அந்தக் குரல் சூதுநாணயக்காரர் தலைவன் குரலென வறிந்து திடுக்கிட்டு விழித்தேன். பிறகு அவன் நயத்தினாலும் பயத்தினாலும் என்னைத் தனக்கு அடிமையாக்கிக்கொள்ள முயன்றான். நான் அவன் கூட்டத்தைச் சேரமாட்டேன் என்று கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டு ரயில்ஸ்டேஷனுக்குப் பக்கத்திலுள்ள ஒரு சோற்றுக்கடையினுள் நுழைந்து சாப்பிட உட்கார்ந்தேன். அக்கடை வேலைக்காரச் சிறுமி வேகமாய் உள்ளே

நுழைந்து என்னை யணுகி, "ஐயா! நீதானு சூதுநாணயம் செய்யும் துரைசாமிபிள்ளை?" என்று கேட்டாள். நான் பயந்து எழுந்தேன். அவள், "ஐயா! போலீஸ்காரர்கள் உன்னைத் தேடிக்கொண்டு வந்திருக்கிறார்கள். ஆனல் நான் உன்னைத் தப்புவிக்கிறேன், பயப்படாதே!" என்று சொல்லி, என்னை ஒரு பரண்மீது ஏற்றி ஒளித்துவைத்துக் காப்பாற்றினாள். எல்லாம் நாளைக்கு ஒருவிதமாய்த் தீர்மானிக்கப் படுமென்று ஏதோ என் மனத்திற் சொல்லுகிறது.

முத்து.—துரைசாமி! ஈசுவரன் உன் பக்கத்திலிருக்கிறு ரென்பதற் கையமில்லை. ஆகையினல், தைரியமாயிரு. நான் இப்போதே பட்டணம் சென்று, ஒரு துப்பனை நியமித்து, நாளைக்கு உனக்கு வேண்டிய உதவிபுரிய ஏற்பாடு செய்கிறேன். இனி, நீ போய்வருகிருயா?"

சம்பாஷணை முடிந்தது. துரைசாமிபிள்ளை அப்பங்களாவை விட்டு வெளியேறி நள்ளிருளில் மறைந்தார்.

## பதினோரம் அத்தியாயம்

### துரைசாமி பிள்ளையின் கடைசி அவகேடு

முந்தின அத்தியாயத்திற்கண்ட சம்பாஷணை நடந்த மறுநாள், சென்னையில் பறச்சேரிக் கடைத்தெருவி லுள்ள ஒரு பணியாரக்கடை வாசலில் ஒரு கோச் வந்துநின்றது. உடனே அதிலிருந்து முத்துசாமிபிள்ளை கீழே யிறங்கி அக்கடைக்குள் நுழைந்தார். கடைக்கு அடுத்தாற்போ லிருந்த படிக்கட்டின்மீது ஏறும்போது, பக்கத்து அறையின் மேற்சன்னல் வழியாக அவ்வறையில் துரைசாமி பிள்ளை உட்கார்ந்திருப்பதைப் பார்த்துக் கடுங்கோபத்துடன் கீழேயிறங்கி அவ்வறைக்குட் புகுந்து, "இது உன்னுடைய வேலையாகத்தா னிருக்குமென்று அப்போதே நினைத்தேன். உன்னை இனிச் சும்மா' விடுவதில்லை. தொலைத்துவிடுகிறேன்!" என்று சொல்லி, துரைசாமி பிள்ளையின் கைகளைப் பிடித்து வெளியே யிழுத்துக் கொண்டுபோய், "கூ கூ! திருடன்! கொலைகாரன்!" என்று கூவினர். அக்கூச்சலைக்கேட்டு, இரண்டு மூன்று போலீஸ்காரர்களும் மற்றும் அநேக ஜனங்களும் அங்குவந்து கூடினர்கள்.

போலீஸ்காரர்கள் வந்து சேர்ந்தவுடன், முத்துசாமிபிள்ளை அவர்களை நோக்கி, "இவன் தான் சூதுநாணயக்கார துரைசாமி பிள்ளை! இவனைப் பத்திரமாய்ப் பிடித்துக்கொள்ளுங்கள்!" என்றார். முத்துசாமிபிள்ளை ஆனரரி மாஜிஸ்ட்ரேட் ஆனபடியால், போலீஸ்காரர்கள் அவர் வார்த்தைகளை நம்பி, துரைசாமி பிள்ளையைப் பிடித்துக்கொண்டார்கள். அப்போது ஒரு பெண்பிள்ளை அக்கடைக்குள்ளிருந்து ஓடிவந்து, போலீஸ்காரர்களைப் பார்த்து, "ஐயா! நீங்கள் பிடித்துக்கொண் டிருக்கும் மனிதன்கையி லிருப்பது என்னுடைய கைப்பெட்டி. தயவுசெய்து அதை வாங்கி என்னிடம் கொடுங்கள்!" என்றாள். உடனே முத்துசாமி பிள்ளை, "அவளையும் பிடித்துக் கொள்ளுங்கள். அவளும் பெருங் குற்றம் செய்தவள்தான். பெட்டியை அவளிடம் கொடுக்காதேயுங்கள்!" என்றார். போலீஸ்காரர்கள் நகைத்து "என்ன சுவாமி! எல்லோரையும் பிடித்துக்கொள்ளும்படி உத்தரவு கொடுக்கிறீர்களே! அப்படி எல்லோரையும் பிடிக்க முடியாது!" என்று சொல்லிவிட்டார்கள். ஆனல் அவர்கள் அந்தக் கைப்பெட்டியை அந்த ஸ்திரீயின் கையில் கொடுக்க முடியாதென்று சொல்லிவிட்டார்கள். முத்துசாமி பிள்ளை, "அதுதான் சரி!" என்றார். நாகலிங்க முதலியாரது மனைவியாகிய அந்த ஸ்திரீ கோபத்துடன் முத்துசாமிபிள்ளையை நோக்கி, "அதுதான் சரி! போலீஸ்காரர்கள் அப்பெட்டியைக் கொண்டுபோய், அதிலுள்ளவைகளையெல்லாம் எடுத்துப் படித்துப் பார்க்கட்டும். பிள்ளையவாள் வாழ்வு முடியும் காலம் நெருங்கிவிட்டது!" என்று சொல்லிவிட்டு அவ்விடம்விட் டகன்றாள்.

போலீஸ்காரர்கள் துரைசாமி பிள்ளையைப் பிடித்துக்கொண்டு போய்விட்டார்கள்.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

### துயரின் இறுதி

மறுநாட் காலையில் முத்துக்குமாரசாமி பிள்ளையால் நியமிக்கப்பட்ட துப்பன் மலர்ந்த முகத்துடன் பிள்ளையவர்களுடைய பங்களாவுக்குச் சென்று, அவரிருந்த அறையை யடைந்து அவரை நோக்கி, "பிள்ளையவாள்! துரைசாமி பிள்ளையவாள் சொன்னதெல்லாம் உண்மை. அவர்தாம் புஷ்பபவனத்தின் எஜமானர். அவர்தாம் குமாரலிங்கம் பிள்ளையின் பிள்ளை

வயிற்றுப் பேரன்! அவர் சூதுநாணயக்காரனுமல்ல; பார்வதியம்மாள் கைப்பெட்டி துரைசாமி பிள்ளையினிடமிருந்ததைப் போலீசார் திறந்து அதிலுள்ள காகிதங்களைப் படித்துப் பார்த்ததில், அவைகள் முத்துசாமி பிள்ளையும் மற்றும் சிலரும் சூதுநாணயக்காரர் தலைவனுக்கு எழுதிக்கொடுத்த ரசீதுகளாகவும் தலைவனது நிஜமான பெயர் மேல்விலாசம் இவைகளைத் தெரிவிக்கும் கடிதங்களாகவு மிருந்தன. அவைகளை அத்தலைவன், தான் இறந்ததும் போலீஸாரிடம் ஒப்புவிக்கும்படி சொல்லி, பார்வதியம்மாளிடம் ஒப்புவித்ததாகத் தெரிய வருகிறது. முத்துசாமிபிள்ளை ஒருவார்த்தை அனுகூலமாகச் சொல்லியிருந்தால், போலீஸ்காரர்கள் அப்பெட்டியைப் பார்வதியம்மாளிடம் கொடுத்திருப்பார்கள். அவர் அதைத் தடுத்து தம்முடைய தலையின்மீது தாமே மண்ணையள்ளிப் போட்டுக்கொண்டார். முத்துசாமிபிள்ளையுள்பட எல்லாச் சூதுநாணயக்காரர்களையும் போலீசார் பிடித்துவிட்டார்கள். துரைசாமிபிள்ளை நாளைக்கு விடுதலைசெய்யப்படுவார்" என்று சொன்னார். முத்துக்குமாரசாமிபிள்ளை அவர் திறமையைப் புகழ்ந்து பேசி, அவருக்குத் தக்க பரிசளித் தனுப்பினர்.

ஒருவாரத்துக் கெல்லாம் துரைசாமிபிள்ளை மோகனசுந்தரியை விவாகஞ் செய்துகொண்டு, தமது சொந்த பங்களாவான புஷ்பபவனத்துக்குச் சென்று சுகமாய் வாழ்ந்துவந்தார்.

---

திவான் பஹதூர் ஸ்ரீமான் பெத்தாச்சி சேட்டியார்.—தமிழ் நாட்டார் இவரை நன்கறிவர். கல்வித்துறையிலும், தமிழபிவிருத்தியின் பொருட்டும் இவர் செலவிட்டுவரும் தொகை மிக்க அதிகம் என்றே சொல்ல வேண்டும். வயதிற் சிறியவரேனும், ஆழ்ந்த அறிவும் விசால நோக்கமுமுடையவர். பல கல்வி ஸ்தாபனங்களுக்குத் தாராளமாய் உதவி புரிந்து வந்திருக்கிறார். இவர் செய்துவரும் பல அருமையான காரியங்களுக்கு மெச்சி, சமீபத்தில் நமது செட்டியாரவர்களுக்கு திவான் பஹதூர் பட்டம் அளிக்கப்பட்டதைப்பற்றி நாம் மிகவும் சந்தோஷிக்கிறோம். இந்த உபகாரி இன்னும் பல நற் காரியங்கள் செய்துகொண்டு ஆரோக்கிய திடகாத்திரராயிருக்க ஈசன் அருள்புரிவாராக!

---

# சிறுவர்களுக்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES

### புண்டரீகன்

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.

பண்டரீபுரம் என்றொரு திவ்யக்ஷேத்திரமிருக்கிறது. இதற்குமுன் அதற்கு லோகதண்டம் என்று பெயர். இது ஒரு சிறந்த தெய்வஸ்தலம். இந்த ஊரில் ஓர் அந்தணரிருந்தார். அவருக்கு ஜத்வா என்று பெயர். ஜத்வா பரம சாந்தகுணசீலர்; நல்லவர்; ஸத்தியந் தவறாதவர்; எல்லோருக்கும் நல்லவராய் நடப்பவர்; ஈசுவரபக்தியுடையவர். அவருக்கு ஸாத்யகி என்றொரு மனைவியிருந்தாள். கணவனிடத்தில் அவள் தெய்வவிசுவாசம் பாராட்டிவந்தாள். அவர்களுக்கு வெகுகாலமாகப் பிள்ளையில்லாமலிருந்தது. அதனால் அவர்கள் இரவும் பகலும் பகவானைத் தியானித்தும் ஆராதித்தும் வந்தார்கள்.

பக்தவத்ஸலனாகிய ஸ்ரீஹரியினுடைய திருவருளினால் அவர்களுக்கு ஒரு புத்திரன் பிறந்தான். அவனுக்கு அவர்கள் புண்டரீகனென்று பெயரிட்டு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்துவந்தனர். தக்க வயதில் அந்தணருடைய மரபின்படி உபநயனமும் செய்வித்தார்கள். பிறகு வேதாத்யயனமும் செய்வித்துப் பதினாறுவது வயதில் ஒரு பெண்ணைத்தேடி விவாகம் நடத்தினார்கள்.

விவாகமான கொஞ்சநாளைக்கெல்லாம் புண்டரீகன் தாய்தந்தையருக்கு அடங்காதவனானான்; தன் மனம் போனபடி நடந்துவந்தான். வேசிவீடே கதியாகவிருந்து பணத்தையெல்லாம் கண்டபடி செலவு செய்துவந்தான்; நட்டுவக்காரர்களிடத்தில் மிகுதியாக நட்புப் பாராட்டிவந்தான்; தாய்தந்தையர் பேச்சைக் கேட்பதேகிடையாது. அவர்களைச்சீறிவிழுந்து கண்டபடி பேசத் தலைப்பட்டான்; சிலசமயம் "நீங்கள் எப்போது சாவீர்கள்? நானெப்போது சங்கடமில்லாம லிருப்பேன்?" என்றும் சொல்வான்; ஆனால் மனையாளிடத்தில் பக்ஷமாயிருந்துவந்தான். அவளைத் துன்பஞ்செய்யாமலிருப்பது அவளுடைய புண்யந்தானென்று அநேகர் சொல்வதுண்டு. சோற்றுவேளை தவிர மற்றவேளைகளில் அவன் வீடுதங்குவதில்லை.

இப்படிப்பட்ட துஷ்டனிடமிருப்பதைப் பார்க்கினும் எங்கேனும் போய் எதையேனுமுண்டு மரணமடைவதே உத்தமமென்று அவனுடைய தாய்தந்தையர் எண்ணிப் பெரிதும் மனவருத்தங் கொண்டிருந்தனர். என்ன செய்வார்கள்? நாடோறும் இவனால் திட்டுக்கேட்பதும், அது பொறாமல் வருந்திக் கண்ணீர் விடுவதுமே அவர்கள் வீட்டில் வழக்கமாய்விட்டது. ஊரும் உறவும் சிரித்துக் கண்டபடி பேசத் தொடங்கினர். என்ன செய்வது?

"அச்சமுள் ளடக்கி அறிவகத் தில்லாக்
கொச்சை மக்களைப் பெறுதலி னக்குடி
எச்சமற் றேமாந் திருக்கை நன்றே."

என்று பெரியார் கூறியிருப்பதை நினைப்பார்களானால் இப்படிப்பட்ட பிள்ளையைப் பெற்றவருடைய மனம் என்ன பாடுதான் படாது?

இப்படியிருக்கையில் ஒருநாள் காசி யாத்திரைக்குப் போய்க்கொண்டிருப்போர் சிலர் லோகதண்டம் என்கிற அந்த ஊரில் வந்திறங்கினர். அவர்களைக் கண்டதும் புண்டரீகனுடைய தாய்தந்தையரும் அவர்களோடு காசி யாத்திரை போகத் தீர்மானித்து, புண்டரீகனை அழைத்து, "அப்பா! எங்களுக்கு வயதாகிவிட்டபடியால் நாங்கள் காசியாத்திரை போய் வரவேண்டுவது அவசியமாயிருக்கிறது. அதை நீ செய்விக்கவேண்டும்" என்று நயந்து கேட்டுக்கொண்டார்கள். புண்டரீகன் நகைத்து, "இவர்கள் எப்பொழுதொழிவார்கள், எப்போது நாம் சுகப்படுவது என்றிருக்கும் என்னிடத்தில் அதைப்பற்றிப் பிரஸ்தாபிப்பானேன்? பிரஸ்தாபியாமலே போகலாம்" என்றான். இதைக்கேட்ட தாய்தந்தையர் "ஆ! பரந்தாமா! இது என்ன பாவம்! இப்படியும் எங்கட்கு ஒரு பிள்ளை பிறக்கவேண்டுமோ? கோவிந்தா! மாதவா!" என்று எண்ணி மகா துக்கத்துடன் அன்றே காசியாத்திரைக்குப் பிரயாணமானார்கள்.

சில நாட்களுக்கப்பால் இன்னும் சிலர் காசி யாத்திரையாகப் புறப்பட்டுவந்து அவ்வூரிலே தங்கினார்கள். அவர்களைப் பார்த்த புண்டரீகன் தன் மனைவியை அழைத்து, "நம்மவீட்டுக் கிழங்கள் காசியாத்திரைக்குப் போயிருக்கின்றனவே! நாம் போகவேண்டாமா? காசியாத்திரை போகும் ஜனங்கள் நம்மூர் சத்திரத்தில்வந் திறங்கியிருக்கின்றார்கள். நான் அவர்களைக் கண்டு இங்கிருந்து எப்போது புறப்படுகிறீர்கள் என்று விசாரித்து வருகின்றேன். இன்று நாமும் யாத்திரை புறப்படுவோம். பயணத்துக்கு வேண்டியதைச் சித்தப்படுத்திக் கொள்" என்று சொன்னான். அவள், "அதற்குப் பணம் வேண்டாமா? காசியாத்திரை சும்மா கிடைத்துவிடுமா?" என்று கேட்டாள்.

புண்டரீகன், "அடி அசடே! காசியாத்திரை புறப்படுவதானால் பணத்துக்குத்தானாபஞ்சம்? வேண்டிய பணமிருக்கிறது. புறப்படு!" என்று சொல்லிவிட்டு, உடனே வந்து இறங்கியுள்ள யாத்திரிகரிடம் போய், அவர்கள் எப்பொழுது புறப்படுகிறார்கள் என்று தெரிந்துகொண்டு வீடுவந்து, பயணத்துக்கு வேண்டியவற்றைச் சித்தப்படுத்திக்கொண்டான்; தனக்கொரு குதிரையும் தன் மனைவிக்கொரு குதிரையும் வரவழைத்தான்; ஊர்முழுவதும் "கிழங்கள் காசி யாத்திரைபோவது நாங்கள் போகாமலிருப்பதா?" என்று சொல்லிவந்து, யாத்திரிகர்களோடு பெரிய ஆடம்பரத்துடன் யாத்திரை புறப்பட்டான். இவனொருகுதிரையிலும் இவன் மனைவியொரு குதிரையிலுமாக ஏறிக்கொண்டு செல்வதைக்கண்ட ஊரார், "ஐயோ கிழவர்களைக் கால்நடையாக அனுப்பினான். இவனுக்கும் இவன் மனைவிக்கும் குதிரை அமர்த்திக் கொண்டானே இரக்கமற்ற பாவி!" என்று புண்டரீகன் செய்கையை இகழ்ந்தார்கள்.

இப்படிப் புறப்பட்ட இவன், முன்னே கால்நடையாகச் சென்ற தாய்தந்தையரை வழியிலே கண்டான், கண்டும் அவர்களைச் சிறிதும் கவனியாமலே சென்றான். அவர்கள் பாவம்! கால் நடையாகப் போனதால் அநேக இடங்களிலே தங்கித்தங்கிச் சென்றார்கள். அவர்களை அவர்கள் மனத்தில் காசிக்குப்போக வேண்டுமே என்று கொண்டிருந்த ஆவலே நடத்திக்கொண்டு போயிற்று. அப்படிப்பட்ட அவர்களைக் கவனியாமல் சென்ற புண்டரீகன் காசிமாநகரி னருகே செல்லுகையில யாத்திரிகரைவிட்டுப் பிரிந்தான். அப்பொழுது வழி தவறி வேறுபக்கம் போய், காசிக்குத தெற்கிலுள்ள குக்குட முனிவருடைய ஆச்சிரமத்தினருகே யிருக்கும் சத்திரத்திலே தங்கினான்.

குக்குட முனிவர் என்பவர் தமது தாய்தந்தையரைத் தெய்வமாகக்கொண்டு அவர்கள்

பெருமரத்தைச் சுற்றிய வள்ளிக்கொடிபோல.

விரும்பிய பணிவிடைகள் புரிவதையே பெரிதாக எண்ணியிருப்பவர். அவர் பகலெல்லாம் புராணங்கள் படித்துத் தாய் தந்தையரைக் கேட்கும்படி செய்வர்; இராக்காலங்களில் ஸ்ரீ ஹரிபஜனை செய்து தமது தாய்தந்தையரையே வணங்கிவருவர். அவர் அந்தப் பணிவிடையையே பெரிதாகக் கருதி இருந்தமையினால் அவர் காசிக்கு அவ்வளவு சமீபத்திலிருந்தும் காசிக்குப் போகவில்லை. காசியாத்திரை, கங்காநதியாடல் முதலிய யாவும் தாய் தந்தையரின் பணிவிடைக்குப் பிறகுதான் என்பது அவர் கொண்டிருந்த கருத்து.

அப்படிப்பட்ட அவரைப்பற்றி இப்போது நினைப்பவர்களும் தங்கள் இடையூறுகள் நீங்கப் பெறுவர் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். அந்த மகான் தமது ஆச்சிரமத்திற்கு வெளியே வந்தார். அவரைப் பார்த்த புண்டரீகன் "ஸ்வாமி இன்னும் காசிஎவ்வளவுதூரத்திலிருக்கிறது?" என்று கேட்டான். அவர் "அப்பா! காசியும் கங்கையும் எந்த மூலையிலிருக்கிறதென்பது எனக்குத் தெரியாது" என்றார். "புண்டரீகன்,ஐயோ! இது என்ன வேடிக்கை! இவ்வளவு அருகிலிருந்தும் இன்னும் காசி க்ஷேத்திரம் போகாத உமது ஜன்மம் எதிற் சேர்ந்தது? எல்லாவற்றிற்கும் பாக்கியம் வேண்டாமா? தவளை தாமரையி னருகேதா னிருக்கிறது! அதன் மணத்தை அது அறிந்து இன்பமடைகிறதா?" என்று கூறிப் பரிகசித்தான்.

## புத்தக வரவு

## BOOKS RECEIVED

தனபாக்கியம் அல்லது ஓர் அதிருஷ்டவதியின் சரித்திரம்.--* இது ஒரு அனுபவ நாவலாகும். ஸ்ரீமான் ச. தா. மூர்த்தி முதலியார் எழுதியது. 8-ஆப்டோன் படங்களுடன் ரூபா 2.

ஷண்முகசுந்தரம் அல்லது காதல்திறம்.—* இது ஒரு துப்பறியும் நாவல். எட்டு ஆப்டோன் படங்கள் கொண்டது. ஸ்ரீமான் பி. எஸ். சுப்பிரமணியம்,எம்.ஏ.,எழுதியது ரூ. 2.

இவைகளைப்பற்றிய விமர்சனம் பின்னர் சஞ்சிகையில் வெளிவரும்.

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

## LADIES' PAGES

### நான்கு கன்னிகைகளின் சரித்திரம்

வடதேசத்தில் பூமண்டலத்திற்கே பெருமை தரக்கூடியவளவு மிகவும் அழகுவாய்ந்த வர்த்தமானபுர மென்றொரு பட்டின மிருந்தது. அதில் பரோபகாரி யென்னும் ஓரரசன் நீதிநெறி வழுவாமல் அரசு புரிந்துவந்தான். அவனுக்கு வெகுநாள்வரையில் மக்கட்பேறில்லாமலிருந்து கடைசியில் ஒரு பெண் பிறந்தது. அக்குழந்தையின் மேனி மாசற்ற தங்கத்தை யொத்திருந்ததால், பிதா அக்குழந்தைக்கு கனகரேகை என்று பெயரிட்டு மிகவும் பட்சமாய் வளர்த்துவந்தான். இவ்விதம் அக்குழந்தை பட்சமாய் வளர்க்கப்பட்டு கன்னிகைப் பருவமடைந்ததும், அவள் பிதா அவளுக்கு விவாகம் பண்ணவெண்ணித் தன் பாரியையாகிய கனகப்பிரபையை அழைத்து, "ஓ! கனகப்பிரபா! நம் குழந்தைக்குப் பருவகாலம் வந்துவிட்டதல்லா? அதைப் பார்த்து என் மனம் அதிகக் கவலைப்படுகிறது. பெண்களைப் பெற்று அருமையாய் வளர்ப்பது பெரிதல்ல. அவர்களைச் சரியான பாத்திரமறிந்து கன்னிகாதானம் செய்வதுதான் மிகக் கடினம். ஒரு கன்னிகையைப் பாத்திரமறிந்து தானம் செய்யாவிட்டால், அது ஆயுள்வரையிலும் வருத்தத்துக்கே காரணமாகும். ஆகையால், நம் அருமைச் செல்வியை யாருக்குக் கொடுப்பது? யார் இவளுக்கு நடை யுடை பாவனைகளிலும் குணத்திலும் படிப்பிலும் சமானமாயிருப்பவர் என்கிற கவலைதான் எனக்கெப்போதும் உண்டாகிறது" என்றார்.

இதைக் கேட்டு நகைத்து, "நாதா! தாங்கள் இவ்விதமெல்லாம் யோசிக்கிறீர்கள். நம் குழந்தையோ தனக்கு விவாகமே வேண்டாமென்கிறாள். இப்பொழுதுதான் அவள் மரப்பொம்மைகளை வைத்து விளையாடிக் கொண்டிருக்கும்போது நான் அங்குபோய், "கண்ணே! எப்போது உன் விவாகத்தைக் கண்ணால் காண்பேன்?' என்று அவளிடம் சொன்னேன். அதற்கவள் நான் சொன்னதைத் தடுத்து, 'அம்மா! தாங்கள் அவ்விதம் நினைக்காதீர்கள். ஒருவருக்கும் என்னைக்

கலியாணஞ்செய்து கொடுத்து விடாதீர்கள். நான் எப்போதும் கன்னிகையாகவே யிருக்கிறேன். நான் உங்களை விட்டுப் பிரியவேகூடாது. அப்படி என்னைப் பலாத்காரமாய் ஒருவருக்கு விவாகம் செய்துகொடுத்தால் அப்பொழுதே நான் மரித்துவிடுவேன் என்பதை நிச்சயமாய்த் தெரிந்துகொள்ளுங்கள். இதில் ஓர் இரகசியமிருக்கிறது. அது சொல்லக்கூடியதன்று. ஆகையால் தாங்கள் வீணாய் ஏன் அவ்விஷயத்தைப் பற்றிக் கவலைப்படுகிறீர்கள்?" என்றுரைத்தாள். இதைச் செவியுற்ற அரசன் திடுக்கிட்டு மனங்கலங்கி உடனே அந்தப்புரம் சென்று பெண்ணைக் கண்டு, "குழந்தாய்? ஏன் விவாகம் வேண்டாமென்கிறாய்? தேவாசுர கன்னிகைகளெல்லாம் தமக்கு நல்ல கணவன் கிடைக்கவேண்டும், அவருடன் கூடிக்கலந்து சுகங்களை அனுபவிக்க வேண்டும் என்று அநேக வருஷங்கள் தவஞ் செய்கிறார்களே. அப்படியிருக்க, நீ விவாகத்தை வெறுப்பதேன்?" என்று வினவ, அதற்கவள், "என்னருமைத் தந்தாய்! எனக்கென்னவோ விவாகம் வேண்டாமெனத் தோன்றுகிறது. அப்படியிருக்க, நீங்கள் ஏன் இவ்விஷயத்தில் வற்புறுத்துகிறீர்கள்?" என்றாள்.

இதைக்கேட்ட அரசன், "குழந்தாய் உனக்குத் தெரியாதது என்னவிருக்கிறது? உலகத்தில் ஒரு பெண் பிறக்கும்போதே அவள் பிறருக்கென்றே பிறக்கிறாள். பிறருக்கென்றே வளர்க்கப்படுகிறாள். ஸ்திரீகள் எப்போதும் ஒரு பர்த்தாவை யடைந்து அவருக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டுவதுதான் நம் தரும சாஸ்திரங்களின் கொள்கை. விவாகமில்லாமல் தன்னிச்சையா யிருந்தால் உலகம் பழிக்கும். ஆகையால் நீ விவாகம் பண்ணிக்கொள்ளத்தான் வேண்டும்" என்று மிகவும் உறுதியாய்ச் சொல்ல, அச்சிறுமி, "அப்படியானால் பிராமணரோ, ராஜகுமாரரோ, யாரொருவர் தாம் நேராகக் கனகபுரி என்னும் பட்டணத்தைக் கண்ணாற் கண்டதாய்ச் சொல்லுகிறாரோ அவருக்குத்தான் நான் மாலையிடுவேன். அப்படிப் பட்டவர் இல்லாவிடில், என்னை வீணாகத் துன்பப்படுத்தவேண்டாம்" என்றாள். "எப்படியாவதிருக்கட்டும், ஏதோ நிபந்தனையின் பேரிலாவது இவள் விவாகத்துக்கு ஒப்புக்கொண்டாளே, அதுபோதும்" என்று மனமகிழ்ச்சியுடன் அவ்விடம்விட்டுச் சென்றான் அரசன்.

மறுநாட்காலையில் தான் சபாமண்டபத்தில் வீற்றிருக்கும்போது தன்னைச் சுற்றிலு முட்கார்ந்திருந்த மந்திரி முதலியவர்களை நோக்கி "உங்களில் யாராவது கனகபுரியைக் கண்டபேருண்டோ? அப்படியானால், உடனே தெரிவித்தால் அவர் பிரமகுலத்தில் தோன்றினவரானாலும் சரி, க்ஷத்திரியகுலத்தி லுதித்தவரானாலும் சரி, அவருக்கு என் அருமைப்புதல்வியைக் கன்னிகாதானஞ் செய்வதுடன் அவரை என் இராஜ்யத்துக்கு யுவராஜாவாகவும் செய்துகொள்ளத் தயாரா யிருக்கிறேன்" என்றான்.

அதைக்கேட்டு அச்சபா மண்டபத்திலுள்ளோரனைவரும் ஒருவர் முகத்தை யொருவர் பார்த்துக் கைகளைப் பிசைந்துகொண்டு ஏதோ முணுமுணுத்துவிட்டுக் கடைசியில், "பிரபுவே! நாங்கள் ஒருவரு மிதுகாறும் அப்பட்டணத்தைப்பற்றிக் காதினாற்கூடக் கேட்டதில்லை" என்று பெருமூச்சுடன் பதிலளித்தார்கள். பிறகு அரசன் வாசற் காவலாளரை வரவழைத்து அப்பட்டணத்திலுள்ளோர் அறியும்படி கனகபுரி விஷயமாய்ப் பறைசாற்றுவிக்கும்படி கட்டளையிட்டான்.

"பிராமணராவது க்ஷத்திரிய குமாரராவது எவர் கனகபுரியைக் கண்டதாகச் சொல்லுகிறாரோ அவருக்குத் தம் பெண்ணையும் யுவராஜ பதவியையும் கொடுக்கச் சித்தமாயிருக்கிறார் அரசர்" என்று பறைசாற்றப்பட்டது.

இவ்விதம் பறை சாற்றியதைச் செவியுற்ற நகர ஜனங்கள், "இதென்ன புதுமை? இதுவரையில் நாமும் நம் பெரியோர்களும் இப்பெயர்கொண்ட பட்டணமொன் றிருப்பதாகவே கேள்விப்படவில்லையே" என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டார்கள். 'நான் பார்த்தேன்' என்று சொல்வோ ரொருவருமில்லை.

இங்ஙனமிருக்க, இவ்விஷயமானது அவ்வூர் வாசியான ஒரு பிராமணப் பிரமசாரி காதில் விழுந்தது. சக்திதேவ னென்கிற அந்தப் பிரமசாரி அச்சமயம் தன் வீட்டிலிருந்த பணத்தை யெல்லாம் சூதாட்டம் முதலிய கெட்டவழியிற் செலவு செய்துவிட்டு பொடிக்காசுகூட இல்லாமற் கஷ்டப்பட்ட சமயமாதலால், இதைக் கேட்டதும் இராஜகன்னிகையி

னிடத்திலும், பணத்திலும் பேராசைகொண்டவனாய், 'நாம் வீட்டிலிருந்த பணத்தை யெல்லாம் கெட்டவழியில் தொலைத்துவிட்டோமாதலால், தாய்தந்தையர்கள் நம்மை வீட்டிற் புகவிடுவதில்லை. பணமில்லாததனால் வேசியும் ஏசுகிறாள். இப்பொழுது நமக்கு வேறொரு கதியும் காணோம். இச்சமயம் நாம் பொய்சொல்லி எப்படியாவது இராஜகன்னிகையையும் இராஜ்யத்தையும் அடைந்துவிடவேண்டும். நான் கனகபுரியைப் பார்த்தேனென்றால், நீ பார்க்கவில்லையென்று யார் சொல்லப் போகிறார்கள். அப்படிச் செய்வதுதான் சரி' எனத் தீர்மானித்து அந்த இராஜ்ய உத்தியோகஸ்தர்களிடம் போய் "நான் கனகபுரியைப் பார்த்தேன்" என்று தைரியமாய்ச் சொன்னான்.

உடனே அக்காவலாளர்கள் மிக்க சந்தோஷத்துடனும் ஆதரவுடனும் அவனை யழைத்துக் கொண்டுபோய் அரசனிடம் சேர்ப்பித்தார்கள். அரசனும் அவன் சொன்னதைக் கேட்டு மிகவும் மனமகிழ்ந்து அவனைத் தன் பெண்ணிடம் அனுப்பினான். அவள் நமது பிரமசாரியைப் பார்த்து, "ஸ்வாமீ! தாங்கள் கனகபுரியைப் பார்த்தவர்கள்தாமா?" என்று வினவ, அவன், "ஆம். பார்த்தது மாத்திரமல்ல. அங்கேயே மூன்று வருஷமிருந்து ஓர் பெரிய ஆசானிடத்தில் படிக்கவும் படித்தேன்" என்று முதலில் சொன்ன பொய்க்குக் கைகால்கள் வைத்துப் பேசினான். "தாங்கள் அங்கு போனதற்குக் காரணம் என்ன?" என்று அவள் வினவ, "நான் ஒரு சமயம் இப்பூமண்டல முழுவதையும் சுற்றிவர நேர்ந்தது. அப்பொழுது அந்நகரத்திற் போய்க் கொஞ்ச நாள் வசிக்கும்படி நேரிட்டது" என்றான். "அப்பட்டினத்திற் கெவ்வழியாய்ப் போனீர்கள்? அப்பட்டினத்தின் நீர்நில வளப்பங்க ளெப்படி?" என்று கன்னிகை வினவ, அதற்கவன், "இங்கிருந்து புறப்பட்டு முதலில் ஹர்ஷபுரம் போய்ச் சேர்ந்தேன். அங்கிருந்து காசி, அங்கிருந்து சில நாட்களில் பௌண்ட்ர வர்த்தனம், அங்கிருந்து வெகு நாட்கள் சுற்றி அலைந்து கடைசியில் கனகபுரிபோய்ச் சேர்ந்தேன். அங்குள்ள நீர் நிலவளப்பங்களை என்னவென்றுரைப்பது!" என்று ஒன்றுக்கொன்றுபொருத்தமாய் வெகு அழகாயச் சொன்னான். ஒரு பொய்யைச் சாதிக்க நூறு பொய் சொல்லவேண்டுமென்கிற விஷயத்தை நம் 'சக்திதேவன் நன்றாய் அறிந்தவன். ஆகையால் அவன் அதோடு நிறுத்தாமல், மேலும் ஏதோ சொல்ல வாரம்பித்தான். இதைக்கேட்ட கன்னிகை அடங்காக் கோபமூண்டு, தன் தோழிகளைக் கூப்பிட்டு "இந்தத் துஷ்டனைக் கழுத்தைப் பிடித்து வெளியில் தள்ளி விடுங்கள்" என்று ஆக்ஞாபித்துவிட்டு, உடனே நேராகத் தன் பிதாவினிடம் சென்று, "தந்தாய்! தாங்கள் இவ்வளவு பெரியவரசராக விருந்தும், சில சமயங்களில் முன்பின் யோசனையின்றிச் சில காரியங்களைச் செய்துவிடுகிறீர்கள். உலகத்தில் சாதுக்களை ஏமாற்றுவதற் கென்றே எத்தனையோ துஷ்டர்கள் காத்திருக்கிறார்கள் என்பது தங்களுக்குத் தெரியாதா? யாரோ ஒரு துஷ்டனை என்னிடம் அனுப்புவித்தீர்களே. அந்த அயோக்கியன் பொய் சொல்லி நம்மை ஏமாற்றி என்னையும் தங்கள் இராஜ்யத்தையும் கைப்பற்ற எண்ணங்கொண்டான். நான் உண்மையை யறிந்து அவனை வெளியில் தள்ளி விடச் சொல்லிவிட்டேன். ஆகையால் என் விவாகத்தைப்பற்றி இப்பொழுது ஒன்றும் யோசிக்கவேண்டாம். பிறகு பார்த்துக்கொள்வோம்" என்று துக்கத்துடனும் வெறுப்புடனும் சொன்னாள். "பெண்ணே! அவ்விதம் சொல்வது நியாயமாகாது. ஒரு கன்னிகையானவள் குறிப்பிட்ட வயதிற்குமேல் விவாகம்பண்ணிக்கொள்ளாமல் பிறந்தவீட்டிலேயே இருந்தால், அவள் எவ்வளவு நெறி தவறாதவளாயிருந்தாலும் உலகம் சும்மாவிராது. வீணான பழிக்காளாக்கிவிடும்" என்று அரசனுரைக்க, "அப்படியானால் தாங்கள் அதற்கு வேண்டிய பிரயத்தனங்களைக் கூடிய சீக்கிரம் செய்து, கனகபுரியைப் பார்த்தவரைத் தேடி அவருக்கு என்னை மணமுடித்துவையுங்கள்!" என்று சொல்லி அந்தப்புரத்துக் கேகினாள் கன்னிகை. அரசனும் நாள்தோறும் இடைவிடாது பறை யறைவித்துக்கொண் டிருந்தான். ஒருவரும் வரக்காணோம்.

இது இப்படியிருக்க, இராஜகன்னிகையினிடம்போய் அவளால் மிகவும் அவமதிக்கப்பட்டுத் திரும்பிவந்த அந்த சக்திதேவன் என்னும் பிராமணப் பிரமசாரி மிகவும் துக்கமடைந்து "நாம் வீணாய்ப்பொய்சொன்னதற்குப் பலனாய் அவளால் அவமான மடைந்தோமே தவிர

அவளை யடையவில்லை. ஆகையால் எப்பாடு பட்டாவது அவளை அடைவதே சரி. இதற்காகப் பூமண்டல முழுவதும் திரிவேன். நடுவில் எத்தனை கஷ்டங்கள்நேர்ந்தாலும், அவைகளைப் பொருட்படுத்தேன். ஒருவேளை பிராணனுக்கே அபாயம் நேர்ந்தாலும் சரி, நான் அப்பட்டணத்தைப்பார்க்காமல் திரும்புவதில்லை" என்று இவ்விதம் திடமாய்த் தீர்மானித்துக்கொண்டு தன்னூரைவிட்டுக் கிளம்பி தெற்குமுகம் நோக்கி பிரயாணப்பட்டு, முதலில் விந்திய மலைச்சாரலை யடைந்து அதைச்சேர்ந்த காட்டினுட்புகுந்து, மிகவுமடர்ந்ததும் புலிகரடி முதலிய துஷ்டமிருகங்கள் பயமின்றி உல்லாசமாய்ச் சஞ்சரிக்கப்பெற்றதுமான அக்காட்டினடுவில் பிராணனைத் துரும்பாக வெண்ணி இராஜகன்னிகையை யடைவதையே பெரும்பொருட்டாய் நினைத்து மிகுந்த தைரியத்துடன் சஞ்சரித்துக்கொண் டிருந்தான்.

இவ்விதம் வெகுகாலம் நடந்து வெகுதூரம் சென்றபின் ஆங்கோரிடத்தில் குளிர்ந்து தெளிந்த ஜலத்தோடுகூடியதும் அழகிய மலர்ந்த தாமரைப்பூ முதலிய ஜலபுஷ்பங்களின் நறுமணம் வீசப்பெற்றதும் ஹம்ஸம் முதலிய ஜலபட்சிகளின் இனிமையான தொனிகள் நிறைந்ததுமான ஒரு தாமரைத் தடாகத்தைக் கண்டான். அதிலிறங்கி ஸ்நானம்செய்து நீர் பருகிச் சற்று இளைப்பாறியதும் கரையேறி நாற்புறமும் நோக்க, அக்குளத்தின் வடபக்கத்தில் ஒரு மகரிஷியின் ஆச்சிரமம் தென்பட்டது. அதனருகிற் சென்று அங்கே ஓர் அரசமரத்தினடியில் அநேக மகரிஷிகளினால் சூழப்பட்டு தேஜோமயமாய் விளங்கும் சூரிய தபசி என்னும் மகரிஷியைக் கண்டு வணங்கி நின்றான். அவர் இவனைப் பார்த்து "அப்பா! நீ யார்? எங்கிருந்து வந்தாய்? எங்கு போகிறாய்? இங்கு வந்ததற்குக் காரணம் யாது?" என்று அன்புடன் வினவ, அதற்குப் பிரமசாரி தன் வரலாற்றைக் கூறி, கனகபுரியிருக்குமிடத்தையும் அதற்குப் போகும் வழியையும் கிருபைகூர்ந்து தனக்குச் சொல்லவேண்டுமெனப் பிரார்த்தித்தான்.

---

# பிரபஞ்ச வர்த்தமானம்

## NEWS AND NOTES

நமது சந்தா நேயர்களுக்கு.—வெளிநாட்டுச் சந்தா நேயர்களிற் பலரும், உள்நாட்டுச் சந்தா நேயர்களிற் சிலரும்; தங்கள் சந்தாவை அனுப்பாமல் அதிகமாய்ப் பாக்கியில் வைத்துக் கொண்டிருப்பது நமக்கு மிகுந்த சிரமத்தையும், அசௌகரியத்தையும் உண்டாக்குகிறது. தனித்தனியாய் வெளிநாட்டு நேயர்களுக்குக் கடிதம் எழுதுவதென்றால் ஒவ்வொருதடவையும் காகிதம் ஒன்றுக்கு 2-அணா செலவு செய்யவேண்டி யிருக்கிறது. ஆகையால் பத்திரிகாபிமானிகள் தயவுசெய்து தாமதம் செய்யாமலும், இனியும் ஆலசியமாயிராமலும் நம் பத்திரிகையின் சந்தா பாக்கியை உடனே அனுப்புவித்தால் பத்திரிகையை நன்கு நடத்த மிக்கச் சௌகரியமாயிருக்கும்.

எமது பத்திரிகை, மாதாந்தப் பத்திரிகைகளுக்குள் எவ்விதத்திலும் தலைமை ஸ்தானம் வகித்து வருகிறதென்பது நம் நேயர்களுக்குத் தெரிந்திருக்கும். இப்பத்திரிகையை நடத்துவதில் நமக்கு ஏற்படும் செலவு மிக்க அதிகம். அதை நாம் எப்பொழுதும் சட்டை செய்ததில்லை. ஆனால் கையைக் கடிக்கும்போதுதான் சிரமமாய் இருக்கிறது. அப்போதுதான் சந்தா நேயர்களைத் தங்கள்பாக்கியை அனுப்பும்படிக் கோருவது.

எவ்வித இடையூறுகளையும் கவனிக்காமல், ஆரம்பித்த காரியம் நன்கு நடைபெறவேண்டுமென்ற ஒரே அவாவுடனும், கவலையுடனும் இப்பத்திரிகையை நடத்திக்கொண்டு வந்திருக்கிறோம். இன்னும் இப்பத்திரிகையில் பல விஷயங்களில் சீர்திருத்தம் செய்து, பத்திரிகையை இன்னும் அழகாய் நடைபெறச் செய்யவேண்டுமென்பதே நமது முக்கிய நோக்கமாகும். நம் நேயர்கள் ஆதரவு எவ்வளவு நமக்குக் கிடைக்கிறதோ அவ்வளவையும் பத்திரிகை அபிவிருத்தியிலேயே உபயோகப்படுத்தச் சிறிதும் பின்வாங்கமாட்டோம்.

பத்திரிகாபிமானிகள் தயவுசெய்து நமது பத்திரிகையைப்பற்றித் தமது நண்பர்களுக்கும் சிபார்சுசெய்து,ஒவ்வொரு சந்தா நேயரும் ஒவ்வொருசந்தாதார் சேர்த்தனுப்பினால் அது எமக்குச் செய்ததோர் பேருபகாரமாகும். பத்திரி

கையை உரியகாலத்திலும், இன்னும் அழகாகவும் வெளிவரச் செய்ய உற்சாகமேற்படும்.

* * *

நீக்கிரோவர் அபிவிருத்தி.—பல நூற்றாண்டுகளாக அந்நிய தேசத்தினர்களுக்கு அடங்கி வாழ்ந்து வந்ததனால் ஆப்பிரிக்காத் தேசத்து நீக்கிரோவர்கள் புத்திகுன்றி யழியப்பெற்று பிறரிட்ட வேலையைச் செய்யும் இயந்திரங்களாகவில்லை யென்றும், ஐரோப்பியர்களுடன் அவர்கள் நெருங்கிப் பழகியதனால் அவர்கள் புத்தியானது கூர்மையடைந்து மாநிடர்களுக்குப்பிரதானமானசுதந்திரங்களை யடைவதற்கு அவர்களைப்பாத்திரர்களாக்கிவிட்டதென்றும், அவர்கள் உலகமெங்கும் மகாநாடுகள் கூடித் தங்கள் குறைகளை நீக்கிக் கொள்ளுவதற்காகச் செய்யும் பெருமுயற்சியினால் தெரியவருகிறது. இவ்வியக்கம் ஐரோப்பிய மகாயுத்தம் முடிந்தவுடன் ஆரம்பித்து, நாளுக்குநாள் விருத்தியடைந்து வருகிறது. அவ்வியக்கத்தின் தலைவர்களான பூக்கர் வாஷிங்டன், போய், மார்க்கஸ் கார்வே என்னும் மூவரில், கடைசியில் கூறப்பட்ட மார்க்கஸ் கார்வே யென்பவர்தாம் நீக்கிரோவர்கள் மனத்தைப் பூரணமாய்க் கவர்ந்து கொண்டிருக்கிறார். ஆப்பிரிக்காவில் சகல நீக்கிரோவர்களையும் ஒன்றுசேர்த்து, பிறதேசத்தார் ஆளுகையை நீக்கி, பெரிய நீக்கிரோவ இராஜ்யம் ஒன்று ஏற்படுத்த வேண்டுமென்பதே அவருடைய பிரதான நோக்கமென்று தெரியவருகிறது.

* * *

கல்விப் பயிற்சியில் நூதன முறைகள்.—இங்கிலாந்தில் கேம்பிரிட்ஜ் என்னும் நகரத்திலுள்ள பெர்ஸ் பாடசாலையில் தலைமை உபாத்தியாயரான டாக்டர் ரௌஸ் தமது பாடசாலையில் வந்துசேரும் சிறுவர்களுடைய மேதையை நன்றாய் அபிவிருத்தி செய்து விளங்கச் செய்யக்கூடிய நூதன முறைகளைக் கண்டுபிடித்து அவைகளை அனுஷ்டித்து வருகிறார். அந்தப் பாடசாலைகளிலுள்ள பையன்கள் தாங்களாகவே ஆங்கில பாஷையில் கவிகளியற்றியும், நாடகங்களியற்றி நடித்தும், தங்களுக்கு வேண்டிய துணிகளை நெய்தும், சட்டிபானைகள், மரசாமான்கள் இவைகளைச் செய்துகொண்டும், ஓர் உருவத்தைப்போன்ற பொம்மை செய்யும் வித்தையைப் பயின்றும், இயற்கையாகவே தங்களுக்கு ஈசுவரனால் அளிக்கப்பட்டுள்ள நூதனமா யியற்றுஞ் சக்தியைப் பெரிதும் அபிவிருத்தி செய்துவருகிறார்கள். சங்கீதத்தையும் அவர்கள் பயில வேண்டுமென்று டாக்டர் ரௌஸ் நிச்சயித்து, அதற்குரிய ஏற்பாடுகளைச் செய்துவருகிறார். சில வுணர்ச்சிகளைப் பழக்குவதிலும் உயர்ந்த எண்ணங்களைப் பிறப்பிப்பதிலும் கலைகளின் பயிற்சி ஒப்பற்ற உபயோகமுள்ளது என்ற பெரிய உண்மையை முற்றிலும் உணர்ந்தே டாக்டர் ரௌஸ் கல்விப்பயிற்சியில் இப்படிப்பட்ட சீர்திருத்தங்களைச் செய்திருக்கிறார்.

* * *

மிதமிஞ்சிய நாகரிகமடைதல்.—சென்னையிலுள்ள பல ஆபீசுகளில் வேலைசெய்யும் உத்தியோகஸ்தர்களும் வக்கீல்களும் வியாபாரிகளும் ஜனசமூகத்துக்கு மிகுந்த உபயோகமுள்ளவர்கள்தாம் என்பதற்குச் சிறிதும் ஐயமில்லை. அவர்கள் மிதமிஞ்சிய நாகரிகமடைந்திருக்கிறார்களென்று எவரும் சொல்லமாட்டார்கள். ஆனால் அவர்கள் விதிவசத்தினால் நிர்மானுஷ்யமான ஓர் தீவிற் கொண்டுபோய்ச் சேர்க்கப்படுவராயின், அத்தீவிலுள்ள வஸ்துக்களிலிருந்து தமக்குத் தகுந்த உணவுப்பொருளைத் தேடிக்கொள்ள வழியறியாது தவிப்பார்கள்; இரவில் துஷ்டமிருகங்கள் தம்மை யணுகாமல் காப்பாற்றிக்கொள்ள பெரிய தீ மூட்ட வேண்டுமென்று அறியாமலும், ஒரு வேளை அது தெரிந்தாலும் தீப்பொறியொன்றுண்டாக்க வழியறியாமலும் விழிப்பார்கள்; வானத்தை நோக்கிப் பெருமழை பொழியப்போகிற சமயத்தை யறிந்துகொள்ளுந் திறனற்று, மழையிலகப்பட்டு வருந்துவார்கள்; துஷ்டமிருகங்கள் தம்மை யணுகும்போது அருகிலுள்ள உயர்ந்த மரங்களிலேறித் தப்பிப் பிழைக்க மாட்டாமல் உயிரிழப்பார்கள். மனிதன் தனக்கு ஈசுவரன் நன்கொடைகளாக வளித்த இயற்கை யுணர்ச்சிகளையும் சக்திகளையும் உபயோகிக்காமல் அவைகளைக்குன்றி யழியவிட்டு, நவீன நாகரிகம்பெற்றுக் களிப்பது பொருளைக் கைவிட்டு நிழலைக் கைப்பற்றியதாக வெண்ணி மகிழும் களியன் செயலை யொத்திருக்கிறது.

* * *



மஹாத்மா காந்தி